"பக்திம் நிஜாம் ப்ரணயபாவநயா க்ருணந்த:" என்று கோதாஸ்துதியிலும் அருளிச் செய்திருக்கிறார். புருஷோத்தமனின் அழகும் ஆடவரும் பெண்மையை அவாவும்படியானதொன்றன்றோ?

ஒரு நாயகி ஏற்ற நாயகனை வரித்து அவனுடன் கூடப்பெறாதபோது மன்மதபாணங்களால் அடியுண்டு வருந்துவதும் அவனை நினைந்து நைந்து உருகுவதும் ச்ருங்காரரஸப்ரதானமான காவ்யங்களில் வர்ணிக்கப்படும் விஷயங்கள். அந்த முறையையும், விசேஷித்து அதில் தமிழர்கள் துறையையும் பின்பற்றி ஸ்ரீதேசிகன், இங்கு தெய்வநாயகனைப் பெற ஆசைப்பட்டு, அவ்வாசை பெருகித் தன்னிலையை மாற்றிப் பெண்ணிலையை அடைவித்தபடியையும், அப்போது விரஹத்தை விருத்திசெய்யும் மன்மத பாணங்களாலே அடியுண்டு வருந்தும் நிலையையும், ஒரு தோழியின் பாசுரத்தாலே தெரிவிக்கிறார். ஸ்ரீதெய்வ நாயகனிடம் மையல் கொண்டு ஸ்திரீபாவத்தை அடைந்தமை 'மெல்லடி வேண்டிய மெல்லியள்' என்பதால் காட்டப்பட்டது. அவனைக் கூடப்பெறாது அதனால் உண்டான விரஹவேதனையை மன்மதன் தன் புஷ்பபாணங்களை வர்ஷித்து விருத்தி செய்கிறான் என்பதை 'அனங்கர் தம் பூங்கரும்புந்திய பூமழையே பொழிவார்' என்று பேசுகிறார். அனங்கனுகையால் அவனுக்கு சரீரம் இல்லை. சரீரம் இருந்தா

லன்றே சரீரம் படைத்தார் படும் வருத்தத்தை உணரக்கூடிய மனமிருக்கும். ஒன்று இரண்டு பாணங்களை எய்தான் என்பதில்லாமல் இடைவிடாது பூ (மன்மதசர) மழையாய்ப் பொழிந்து விரஹத்தை மறக்கவும் ஒட்டாது செய்கிறான் என்பது பொருள். மன்மதனுக்குக் கரும்புதான் வில் என்றும், புஷ்பங்களே பாணங்கள் என்றும் பிரஸித்தம். அனங்கனாயிருந்தும் சரீரம்கொண்டு செய்யவேண்டிய கார்யமான எய்தலைச் செய்கிறான்; துன்பத்தை உண்டு பண்ணும் இயல்பில்லாத புஷ்பங்களாலே வருத்துகிறான்; பஞ்சபாணம் மட்டுமுடையவன் பாணவர்ஷத்தைச் செய்கிறான்; இவ்வளவும் வருத்தம் பொரு ஒரு மெல்லியள் மேல் என்ன விபரீதம்! என்று தோழி கலங்கிக் கூறும் பாசுரமாயிருக்கிறது இது.

இப்படித் தமிழ்மரபை யொட்டிப் பாசுரார்த்தம் பெறுவதோடு நிற்காமல் இன்னும் சற்று ஆழ்ந்து பார்த்தால் சில சப்தஸ்வாரஸ்யங்களால் வேறு ரஸமான அர்த்தங்களும் தோன்றுகின்றன. 'அனங்கர்' என்று மரியாதை தோற்ற உபயோகிக்கப்பட்ட சொல் ஸாதாரண மன்மதனைச் சொல்வதோடு கூட "ஸாக்ஷாத் - மந்மத - மந்மத:" என்று சொல்லவல்ல அழகப் பிரானார் தம்மையே குறிக்கிறது எனக் கொள்ளலாம். அவருடைய பூங்கரும்பாவது அழகிய திருப்புருவங்கள். "இன்னுயிர்க்கு ஏழையர்மேல்

வளையும் இணை நீலவில் கொல்? மன்னிய சீர்மதனன் கருப்புச்சிலை கொல்?" என்று நம்மாழ்வார் எம் பெருமானுடைய திருப்புருவங்களை சங்கித்தபடி அப் பூங்கரும்பிலிருந்து விடப்பட்ட பாணங்கள் போல் இருக்கின்றன திருக்கண்மலர்களின் கடாக்ஷங்கள். தேவநாயக பஞ்சாசத்தில் "அம்ருத - வர்ஷ - நிபை: அபாங்கை:" என்று அம்ருதவர்ஷமாக வர்ணிக்கப் பட்ட கடாக்ஷங்கள் இங்கே புஷ்பவர்ஷமாக வர்ணிக் கப் பெறுகின்றன. விரஹதாபம் தீரும்படி குளிரக் கடாக்ஷிக்கிறுன் என்று சொன்னபடி. நல்ல வேத வித்துக்களான மஹான்கள் வஸிக்கும் அயிந்தைமா நகரில் கோயில் கொண்டவனுயிற்றே என்று எண்ணி ஆசைப்பட்டு மோசம்போனேன் என்றும், இழிவார் இழிக என்று ஆசைப்பட்டவர்களெல்லாம் வாருங் கள் என்று சொன்ன வார்த்தையை நம்பி இந்நிலை வந்தது என்றும் விப்ரலம்ப ச்ருங்காரமாக வைத்துப் பொருள்கொள்ளுவதோடு நில்லாமல், ஸத்ஸஹ வாஸத்தாலும் தன் ஸங்கல்பத்தாலும் தன்னை விரும்புவாரைத் தானும் விரும்பிக் குளிரக் கடாக்ஷிக் கிறுன் என்று ஸம்ச்லேஷதசாவிஷயமாகவும் அர்த் தம் கொள்ளலாம். பெரும்பாலும் நாயிகாபாவம் விச்லேஷதசையிலேயே கைக்கொள்ளப்படுகிறது. ஸம்ச்லேஷரஸமும் த்வனிக்கும்படியாக விச்லேஷ தசையைப் பேசும் பாசுரம் அழகாக அமைந்திருக்

கிறது. அயிந்தைமாநகரிலுள்ள மெய்யடியார்கள் ஸ்ரீதேசிகன் காலத்தில் எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தார்கள் என்பதை 'மொழிவார் மொழிவன மும் மறையாகும்' என்றதிலிருந்து ஒருவாறு ஊஹிக்கலாம். க்ஷேத்திரமஹிமையால் அவர்களுக்கு இப்பெருமை கிடைத்தது என்றும் பொருள் கொள்ளும்படி 'மும் மறை ஆகும் அயிந்தை' என்று பிரயோகிக்கப்பட் டிருக்கிறது. இப்படிப்பட்ட மஹான்கள் வஸிப்ப தாலேயே எம்பெருமானும் இதை உகந்து இங்கே நித்யவாஸம் பண்ணுகிறான் என்பதும் ஸூசிதம். இப் படி பகவத் - ஸாந்நித்யமும் பாகவத - ஸம்ருத்தியும் மலிந்து கிடந்ததாலேயே ஸ்ரீதேசிகன் நெடுநாள் இங்கே வாஸம் செய்யத் தீர்மானித்திருக்க வேண்டும் என்றும் அறியலாம்.

அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த க்ஷேத்திரத் தில் வந்தது மட்டுமன்றி எம்பெருமான் இங்கே நிலையாக நின்றான்; அதுவும் ஒரு இன்னமுதக் கட லாக என்று இரண்டாம் பாதத்தில் கூறப்படுகிறது. "கடலொப்பார் கண்டிடினும் காணக் கூத்தால்" என்கிறபடி அளவிடவொண்ணாமைக்கும் காம் பீர்யத்திற்கும் கடல்போல் விளங்குகிறார். ஆனால் உப்புக்கடலன்று; அமுதக் கடல்; இன்னமுதக் கடல். இது ஓர் அபூதோபமை. "அலையற்ற ஆரமுதக்கடல்" என்பதுபோல ஸ்ரீதேவநாதனுடைய திவ்யமங்கள

விக்ரஹம் ஒரு விலக்ஷணமான அம்ருத ஸாகரம்போல் விளங்குகிறது என்கிறார்.

இழிவார் இழிக - நிற்கிற நிலையிலிருந்தே அனைவரையும் கூவி அழைத்து உங்களுக்காகவே நான் இங்கேவந்து நிற்பது என்று பேசாமல் பேசினாராயிற்று. 'இழிவார்' என்பதால் ஆசைமட்டும் இருக்குமாகில் அனைவருக்கும் இழிய அதிகாரம் உண்டு என்று கிடைக்கிறது.

விழிவார் அருள் மெய்யர் - திருக்கண்களிலிருந்து வெள்ளமிடும் அருளையுடைய மெய்யர். 'இழிவார் இழிக' என்று கூறியதை மெய்யாக்கிக் கொடுக்கும் கண்களைக் கொண்டு அடியவர்க்கு மெய்யராகிறார்.

மெல்லடி வேண்டிய மெல்லியள் - சரணகமலமாகையால் மெல்லடி, மிருதுவான பாதம்; அதை விரும்புவோரும் கூட மெல்லியர் (மிருதுவான தன்மையர்) ஆகிறார்கள் என்றும் சொல்லும்படி திருவடிகளின் மார்த்தவம் இருக்கிறது. 'மெல்லடி வேண்டிய படியால் மெல்லியள் ஆனாள்' என்று ரஸோக்தி. மெல்லியள்' என்ற ஸ்திரீலிங்கமான பதமும் கடைசிப் பாதமும் இப்பாசுரம் நாயிகாபாவ விஷயம் என்பதைக் காட்டுகின்றன. பெண்பேச்சிலும் தன் பேச்சு, தாய்ப் பேச்சு, தோழிப் பேச்சு என்று பல வகையுண்டு. 'மெல்லியள்' என்று படர்க்கைச் சொல்லாக இருப்பதால் இது தாய் அல்லது தோழியின்

பேச்சாக இருக்கவேண்டும். நாயகி மன்மதபாணத்திற்கு இலக்கானமையைக் கூறுவதால் அந்தரங்கத் தோழியின் பேச்சு என்று சொல்வது பொருந்தும்.

பொழிவார்........பூமழையே - இவள் மென்மை கண்டு இரங்காமல் மன்மதன் தன் அம்பு மழையைப் பொழிகிறான். மன்மதமன்மதன் இவளது மென்மைக் கேற்ப மிருதுவான புஷ்பங்களை எய்கிறான் என்று த்வனி. ஸாதாரண மன்மதன் தன் பாணங்களை எய்து ஒரு தலைவிக்கு ஒரு தலைவனிடத்தில் ஆசையை விளைவிப்பான். மன்மதமன்மதனான இவனே தன்னிடத்திலேயே ஆசையை உண்டாக்கி அதை விருத்தி செய்கிறான் என்ற வேறுபாடும் காணத்தக்கது. இவ்விதமே இன்னும் பல ரஸமான அர்த்தங்களைப் பொதிந்து கொண்டிருக்கும் இன்னமுதக் கடல் இந்தப் பாசுரம் என்பதை ரஸிகர்கள் அனுபவித்து அறியலாம். (3)

மழையிலெழுந்த மொக்குள் போல் வையம்
அழிய வொன்றழியா அடியவர் மெய்ய!
அருமறையின் பொருள் ஆய்ந்தெடுக் குங்கால்
திருவுடனமர்ந்த தெய்வ நாயகன் நீ;
நின் திரு தனக்கு நீ திருவாகி

இந்து தன் நிலவுடன் இலங்கு தன்மையினே;
நந்துதலில்லா நல் விளக்காகி
அந்தமிலமுத வாழியாய் நிற்றி;
பாற்கடல் தன்னில் பன்மணியன்ன
சீர்க்கணம் சேர்ந்த சிலமெல்லையிலே;
அடியவர் பிழைகள் நின் கருத்தடையா(து)
அடைய வாண்டருளும் அரசனும் நீயே;
உயர்ந்த நீயுன்னை யெம்முடன் கலந்தனே;
அயிந்தை மாநகரிலமர்ந்தனை யெமக்காய்;
சித்திர மணி யெனத் திகழுமன்னுருவில்
அத்திரமணி யென வனைத்து நீ யணிதி;
விண்ணினுளமர்ந்த வியனுருவதனுல்
எண்ணிய வீரிரண்டு உருக்களு மடைதி;
பன்னிரு நாமம் பலபல வுருவாய்
என்னுருவெங்கும் எய்தி நீ நிற்றி;
மீனேடாமை கேழல் கோளரியாய்
வானுர் குறளாய் மழுப்படை முனியாய்ப்
பின்னு மிராமரிரு வராய்ப் பாரில்
துன்னிய பரந்தீர் துவரை மன்னனுமாய்க்
கலி தவிர்த்தளிக்கும் கற்கியாய் மற்றும்

மலிவதற் கென்றும் வல்வினை மாற்ற
நானுவுருவங் கொண்டு நல்லடியோர்
வானுரின்ப மிங்குற வருதி;
ஓருயிருலகுக் கென்னுநீ திருவொடு
ஏருயி ரெல்லா மேந்தி யன்புறுதி;
யாவரு மறியாதெங்கு நீ கரந்து
மேவுறச் சூழ்ந்து வியப்பினுல் மிகுதி;
கொண்டிட வெம்மை யடைக் கலமுலகில்
கண்டிலங் கதியுனையன்றி மற்றென்றும்;
பல்வகை நின்ற நின்படியனைத்தும்
தொல்வகை காட்டும் துணிந்து தூமறையே.
(4)

மழையிலெழுந்த - (மழை பெய்து கொண்டிருக்கும்போது) அம்மழை நீரில் உண்டான
மொக்குள்போல் - நீர்க்குமிழியைப்போல்
வையம் - உலகம் (எல்லா உலகங்களும்)
அழிய - அழியும்போது
ஒன்று அழியா - சிறிதளவும் குன்ருது குறையாது (நிற்கும்)
அடியவர்மெய்ய! - தாஸஸத்யனுகிய தெய்வ நாயகனே!

அருமறையின் பொருள் - (கற்றறிவதற்கு) அரிய வேதங்களுடைய அர்த்தத்தை

ஆய்ந்தெடுக்குங் கால் - ஆராய்ந்து ஸாரத்தை நிஷ்கர்ஷிக்கு மிடத்தில்

திருவுடன் அமர்ந்த - பெரிய பிராட்டியாருடன் கூடிய

தெய்வ நாயகன் - எல்லா தேவதைகளுக்கும் நாதன்

நீ - நீ ஒருவனே;

நீ - (அப்படிப்பட்ட) நீ

நின் திரு தனக்கு - (எவளுடைய ஸம்பந்தத்தால் உனக்குத் தெய்வநாயகத்வம் ஸித்தித்ததோ அப்படிப்பட்ட) உனது பெரிய பிராட்டியாருக்கு

திருவாகி - அவளுடைய பெருமைகளுக்குக் காரணமாகி

இந்து - சந்திரன்

தன் நிலவுடன் - தனது நிலாவோடு கூட

இலங்கு தன்மையினை - பிரகாசிப்பது போன்ற இயல்பை உடையை;

நந்துதல் இல்லா - (ஒருபோதும்) அழிவு (அணுதல்) இல்லாத

நல்விளக்காகி - நல்ல (அதாவது அழகான மங்களகரமான) தீபமாகி,
அந்தம் இல் - எல்லையில்லாத (முடிவில்லாத)
அமுத ஆழியாய் - அம்ருத ஸாகரம்போல்
நிற்றி - நிற்கிறாய்;
பாற்கடல் தன்னில் - பால் ஸமுத்திரத்தினிடத்து
பல்மணி யன்ன - பலவகை ரத்தினங்கள் இருப்பது போல
சீர்க்கணம் சேர்ந்த - கல்யாண குண ஸமூஹங்களுடன் சேர்ந்த
சீலம் - ஸௌசீல்யம் என்று சொல்லப்பட்ட (தாழ்ந்தவருடன்கூட நெருங்கிப் பழகும்) குண விசேஷத்தை
எல்லை யில்லை - அளவிட வொண்ணாதபடி பெற்றிருக்கிறாய்;
அடியவர் பிழைகள் - உன்னை ஆச்ரயித்தவர்களுடைய அபராதங்கள்
நின். கருத்து அடையாது - உனது திருவுள்ளத்தை அடையாதபடி
அடைய - முழுவதையும்
ஆண்டு - பரிபாலித்து
அருளும் - கிருபை செய்யும்
அரசனும் நீயே - ராஜாதி ராஜனும் நீயே;
உயர்ந்த நீ - எல்லாவற்றிற்கும் மேம்பட்ட நீ

உன்னை - அப்படிப்பட்ட உன்னை
எம்முடன் - மிகத்தாழ்ந்த எங்களோடு
கலந்தனை - (ஒரு நீராகக்) கலந்தாய்;
அயிந்தை மாநகரில் - திருவஹீந்திரபுரம் என்னும் திவ்ய தேசத்தில்
எமக்காய் - எங்களுக்காகவேண்டி
அமர்ந்தனை - நித்யவாஸம் செய்தருளுகிறாய்;
சித்திரமணியென - அழகான நீல ரத்னம்போல்
திகழும் - பிரகாசிக்கும்
மன்னுருவில் - நித்யமான உனது திருமேனியில்
அத்திரம் அணி என - அஸ்திரங்கள் திருவாபரணங்கள் என்று
அனைத்தும் - ஸகலதத்துவங்களையும்
நீ அணிதி - நீ அணிந்துகொண்டிருக்கிறாய்;
விண்ணினுள் அமர்ந்த - ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளி யிருக்கும்
வியன் உரு - பெரிய அல்லது விலக்ஷணமான பரவாஸுதேவ ரூபம் என்ன;
அதனால் எண்ணிய - அதனால் ஸங்கல்பிக்கப் பட்ட
ஈரிரண்டு உருக்களும் - (வாஸுதேவன், ஸங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன், என்கிற) நான்கு (வ்யூஹ) ரூபங்களையும்
அடைதி - அடைந்து நிற்கிறாய்;

பன்னிரு நாமம் - கேசவாதி பன்னிரண்டு நாமங்களை உடைய

பலபல உருவாய் - வெவ்வேறு திருமேனிகளை உடையவனாய்

என்னுரு எங்கும் - என்னுடைய சரீரம் முழுவதும்

எய்தி - அடைந்து

நீ நிற்றி - நீ நிற்கின்றாய்.

மீனோடு
ஆமை
கேழல்
கோளரியாய் } மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரசிங்க ரூபங்களென்ன,

வானர் குறளாய் - ஆகாசத்தை அளாவிய வாமனனென்ன

மழுப்படை முனியாய் - கோடரியை ஆயுதமாக உடைய பரசுராமனென்ன,

பின்னும் இராமர் இருவராய் } அதற்குப் பிறகு ஸீதாராமன், பலராமன் - என்கிற இரண்டு ரூபங்களென்ன

பாரில் துன்னிய - பூமியின்கண் அமர்ந்துள்ள

பரம் தீர் - பாரத்தைப் போக்கின

துவரை மன்னனுமாய் - துவாரகா நாதனான கிருஷ்ணனென்ன,

கலிதவிர்த்து அளிக்கும் - கலிகாலத்தில் ஏற்படும் துன்பங்களைப் போக்கி மறுபடி உலகத்தை ரக்ஷிக்கும்

கற்கியாய் - கல்கி என்னும் ரூபமென்ன (இப்படிப்பட்ட திவ்ய அவதாரத் திருமேனிகளை) அடைந்து

மற்றும் - இன்னும்

மலிவதற்கு - எல்லோருக்கும் அதிக ஸுலபனாய் இருப்பதற்காக

என்றும் - எக்காலத்திலும்

வல்வினை - (ஆச்ரிதர்களுடைய) பலமான பாபங்களை

மாற்ற - போக்குவதற்காக

நானா உருவம் - பல்வேறு (அர்ச்சா) திவ்ய மங்கள விக்ரஹங்களை

கொண்டு - பரிக்ரஹித்துக்கொண்டு

நல்லடியோர் - உன்னிடத்திலே ப்ரீதியையுடை (ஆழ்வார்களைப் போன்ற, உன்) தாஸ பூதர்கள்

வான் ஆர் இன்பம் - ஸ்ரீ வைகுண்டத்தில் பூர்ணமாக இருக்கும் பேரின்பத்தை

இங்கு உற - இங்கேயே அடையும் படியாக

வருதி - வருகிறாய் (அவதரிக்கிறாய்).

உலகுக்கு ஓர் உயிர் என்னும் நீ - உலகத்திலுள்ள ஸகல சேதனு சேதனவஸ்துக்களுக்கும் ஒப்பற்ற அந்தராத்மாவாக இருக்கும் நீ

திருவொடு - பிராட்டியோடு

ஏர் உயிர் எல்லாம் - அழகுடன் பொலிகின்ற ஆத்ம வர்க்கத்தை எல்லாம்

ஏந்தி - (அந்தர்யாமி) வடிவுடன் இருந்து தாங்கி

இன்புறுதி - (விசேஷ) இன்பத்தை அடைகிருய்;

யாவரும் அறியாது - எவரும் அறியாமல்

எங்கும் - எல்லா இடத்திலும்

நீ கரந்து - (பாலுள் நெய்போல்) மறைந்திருந்து

மே உற - மேன்மையடையும்படியாக

சூழ்ந்து - (எல்லாவற்றையும்) வியாபித்து,

வியப்பினுல் - (அந்த) ஆச்சர்யத்தினுல்

மிகுதி - விஞ்சியிருக்கிருய்;

எம்மை - எங்களை

அடைக்கலம் கொண்டிட - ரக்ஷ்யவஸ்துவாக ஏற்றுக் கொள்ள

உலகில் - இந்த உலகத்தில்

உனையன்றி - உன்னைத் தவிர

கதி மற்று ஒன்றும் - வேறு ஒரு வித ரக்ஷகனையும்

கண்டிலம் - (நாங்கள்) காணவில்லை.

பல் வகை
நின்ற } - (கீழே கூறியபடி) பல விதங்களாக இருக்கும்

நின்படி
அனைத்தும் } - உன் பிரகாரங்கள் எல்லாவற்றையும்

தொல் வகையே - பழைமையான வழியின் படியே

தூமறையே - பரிசுத்தமான வேதம் ஒன்றே

துணிந்து - தைரியமாக (நிச்சயமாக)

காட்டும் - காட்டிக் கொடுக்கும்.

ஸ்ரீ தேசிகப் பிரபந்தத்தின் பாசுரங்களுக்குள் முப்பத்திரண்டு அடிகள் கொண்ட நிலைமண்டில ஆசிரியப்பா இதுவொன்றே. ஹஸ்திகிரிமாஹாத்மியத்தில் பதினாறு வரிகள் கொண்ட ஒரு பாசுரத்தில் ப்ரஹ்மஸூத்ரங்களின் பதினாறு பாதங்களில் கூறப்படும் பரப்ரஹ்மத்தைப் பற்றிய விஷயங்களை ஸ்ரீபாஷ்யத்தை அடியொற்றி அநுபவித்தார். இங்கே முப்பத்திரண்டு அடிகளில் அந்தப் பரப்ரஹ்மமான ஸ்ரீமந் நாராயணனுடைய ஸ்வரூப ரூபகுண விபவங்களையெல்லாம் ஆழ்வார்கள் அனுபவித்துப் பாசுரமிட்டபடியே தானும் அனுபவித்து அழகாய்ப் பாடுகிறார். ஸ்ரீமானான நாராயணனே பரதத்துவம், அவனே பரமஹிதம், அவனே புருஷார்த்தம் என்பதே இங்கு நிரூபிக்கப்படுகிறது.

முதன் முதலில் எம்பெருமானுடைய நித்யத்வம் கூறப்படுகிறது. அண்டங்களும் அண்டத்துக்குட் பட்ட உலகங்களும் எல்லாம் அழிந்தவன்றும் ஒரு சிறிதும் மாறுதலில்லாத தெய்வம் இதொன்றே. மற்றைத் தெய்வங்களெல்லாம் மறைந்த பிரளயங் களிலும் இவன் ஒருவனே எஞ்சி நிற்பவன். ஆகை யால் இவனே தெய்வநாயகன். இந்த விசேஷார்த் தத்தைத் தரும் சப்தம் இப்பெருமானுக்குத் திரு நாமமாக அமைந்ததொருபடியே என்று அதை யிட்டே அவனை விளிக்கிறார்.

மழையில் எழுந்த மொக்குள்போல் வையம்—அழகான உவமை. மழை பொழியும்போது நீர்க் குமிழிகள் தோன்றி, சற்று நின்று அழகாகப் பிர காசித்து, உடனே அழிகின்றன. அதுபோலவே இவ் வுலகமும் இருக்கிறது. பகவானுடைய தயையினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டுப் பல்வேறு நாம ரூபங்களை யுடைய தாய்ச் சிறிதுகாலம் நின்று திகழும் உலகங்க ளெல்லாம் நிலையாக நிற்காமல் முடிவில் அழிந்து போகின்றன.

ஒன்றழியா அடியவர் மெய்ய - எல்லாம் முற்ற அழிந்தாலும் ஒரு சிறிதும் அழியாதவன் ஒருவனே. அவனே இங்கே அடியவர்க்கு மெய்யனாக விளங்கு கிறவன். "அன்றழியா" என்றும் சிலர் பாடம் கொள்வர். 'அன்று அழியாதவன்' என்றால் என்

றேனும் அழியக்கூடியவன் என்று பொருள்படுமா கையால் அது அவ்வளவு யுக்தமன்று.

அருமறை - ஸூக்ஷ்மமான வேதம்; ஆதாவது அரும்பாடுபட்டு அர்த்தத்தைக் கண்டுபிடிக்க வேண்டிய வேதம்.

அருமறையின் பொருள் - அப்படிப்பட்ட வேதத்தின் உட்பொருள். வேதம் பல படியாகப்பேசு வதொன்ருகையால் அதன் கருத்தை ஆய்ந்தறிந்து மெய்ப்பொருளைக் கொண்டு பிறபொருளை ஒதுக்க வேண்டியிருக்கிறது. அதை நன்கு ஆய்ந்தெடுத்தவர் கள் ஆழ்வார்கள்.

"அந்தமிலா ஆரணங்கள் நாலாய் நின்ற அதன் கருத்தை ஆழ்வார்கள் ஆய்ந்தெடுத்துச் செந்தமிழால் அருள் செய்"தார்கள் என்று இவர் தாமே பிரபந்த ஸாரத்தில் அருளிச் செய்திருப்பதை இங்கே நினைப் பது. அவர்கள் அருளிச்செய்த தமிழ் மறையையே இந்தப் பாசுரத்தின் இறுதியில் "தூமறை" என்று கொண்டாடுகிருர்.

ஆய்ந்தெடுக்குங்கால் - வேதங்களை முழுவதும் ஆராய்ந்து அதன் உண்மையான கருத்தைத் தெரிந் தெடுத்தால்.

தெய்வநாயகன் திருவுடன் அமர்ந்த நீ - 'பர தேவதை லக்ஷ்மியுடன் கூடியேயிருக்கும் நீதான்' என்று விளங்குகிறது. இந்திரனையும் வாயுவையும்

ப்ரஹ்மாவையும் சிவனையும் அங்கங்கே வேதங்கள் கொண்டாடினாலும், அவற்றையெல்லாம் ஐககண்ட்யம் செய்து பார்த்தபோது ஸ்ரிய: பதியாகிய நீதான் பரதேவதை என்று நிஷ்கர்ஷிக்கப்பட்டிருக்கிறது என்று பொருள்.

நின் திருதனக்கு நீ திருவாகி - 'ஸ்ரீ' என்கிற ஸம்ஸ்கிருதபதம்போல 'திரு' என்னும் தமிழ்ச்சொல் மங்களம் செல்வம் ஸம்பத்து முதலிய பொருள்களைக் குறிக்கும். அவைகளுக்கெல்லாம் அதிதேவதை லக்ஷ்மி. அவளால் உனக்கு அவையெல்லாம் ஸித்திக்கின்றனவாகையால் அவள் 'நின்திரு' உனக்குத் திரு. அப்படிப்பட்ட திருவுக்கு ஸம்பத்து மங்களம் முதலியவையெல்லாம் நீயாகிறாய். ஆகையால் அவளுக்கு நீ திரு. இவ்விதம் ஒருவருக்கொருவர் பெருமையையளிக்கும் இத்தன்மை வேறெங்கும் காண இயலாது.

இந்தச் சேர்த்திக்கு உபமானம் கொடுக்கிறார் "இந்து தன்நிலவுடன் இலங்குதன்மையினை" என்று. இந்து - சந்திரன். சந்திரனும் நிலவும் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாமல் இருப்பதுமட்டுமன்றி இரண்டும் தேஜோ ரூபமாய் இரண்டும் ஸந்தோஷத்தை உண்டு பண்ணுவதுபோலப் பெருமாளுடையவும் பிராட்டியுடையவும் சேர்த்தி இருக்கிறது. உக்ரமான பாஸ்கரனையும் அவன் பிரபையையும் உபமானமாகக்

கூறுது ஆஹ்லாதகரனுன சந்திரனேயும் சீதளமான நிலவையும் கூறியது கவனிக்கத்தக்கது.

நந்துதலில்லா நல்விளக்காகி - ஒருக்காலும் கெடாத, அதாவது மங்கியோ அணைந்தோ போகாத அழகான விளக்காகி.

அந்தமில் அமுத ஆழியாய் நிற்றி - முடிவில்லாத அம்ருத ஸாகரமாய் நிற்கிருய். 'அந்தமில்' என்பதால் ஸர்வேச்வரனுக்கு தேசம் காலம் வஸ்து என்ற மூன்று விதத்தாலும் ஏற்படக்கூடிய முடிவு (அல்லது அளவு) இல்லாமை கூறப்படுகிறது. 'அமுதவாழி' என்பதால் உப்புக்கடல் அன்று, இன்பக் கடல் என்பது சொல்லப்படுகிறது.

இந்த இரண்டு அடிகளாலும் வேதாந்தங்களில் ப்ரஹ்மத்திற்கு முக்கியமானவை என்று நிர்ணயம் செய்யப்பட்ட ஐந்து குணங்களும் சொல்லப் படுகின்றன. "நந்துதலில்லா" என்று ஸத்யத்வம் அதாவது விகாரமின்மை; "நல்" என்று அமலத்வம், அதாவது கெட்ட குணங்களில்லாமை; "விளக்கு" என்று ஜ்ஞானத்வம்; "அந்தமில்" என்று அநந் தத்வம்; "அமுதவாழி" என்று ஆநந்தத்வம். 'நல் விளக்காகி' 'அமுதவாழி' என்று ஸர்வேச்வரன் ஞானுநந்தஸ்வரூபனுக இருக்கிருன் என்று காட்டவே 'ப்ரஹ்மம் நிர்க்குணம் கேவலசிந்மாத்திரம்' என்று

பேசும் மதங்களைப் பொய்யாக்கி நிற்கிற நிலை இது என்று அழகாக அருளிச் செய்யப்பட்டதாகிறது.

ப்ரஹ்மஸ்வருபத்தை நிரூபிக்குமதான குணங்களைப் பேசியபின், மற்ற கல்யாணகுணங்களை அனுபவிக்கிறார்

'பாற்கடல் தன்னில் பன்மணி யன்ன
சீர்க்கணம் சேர்ந்த சீலம் எல்லையிலை' என்று

சீர் என்றால் கல்யாணகுணம். சீர்க்கணம் - கல்யாண குணஸமூஹம். இவைகள் சீலத்தில் சேர்ந்திருக்கின்றன என்கிறார். சீலமும் ஒரு குணமாயிருக்க, அதன் முக்யத்வத்தைக் காட்டும்பொருட்டு அதைத் தனிக்குணமாகவும் அதை ஆச்ரயித்து மற்ற குணங்கள் இருக்கின்றன என்றும் பேசுகிறார்.

சீலம் - ஸௌசீல்யம்; அதாவது தான் மிகவும் உயர்ந்தவனாயிருக்கச் செய்தேயும் பிறர் தாழ்வை நோக்காது அவர்களுடன் ஒன்றாக நெருங்கிப் பழகும் தன்மை. இதன் பெருமையைப் பார்த்து இதையே குணமாகக் கூறுவது வழக்கம். சக்கரவர்த்தித் திருமகனின் கல்யாண குணங்களைப் பேசப்புக்க வால்மீகி மஹரிஷி முதலில் 'குணவான்' என்று ஆரம்பித்து, அதன் பின்னரே இதர குணங்களை வரிசையிடுகிறார். இங்கே 'குணம்' என்று அவர் கூறுவது ஸௌசீல்யத்தையே. இதர குணங்கள் இதைச் சேர்ந்து நிறம் பெற்றுக் கல்யாண குணங்களாகின்றன.

அவையெல்லாம் இதில் ஒடுங்கும். ஆதலால்தான் 'சீர்க்கணம் சேர்ந்த சீலம்' என்று பேசினபடி.

இந்தச் சீர்க்கணத்திற்கு உவமை பாற்கடல் தன்னில் பன்மணி. க்ஷீரஸமுத்திரத்தில் கிடக்கும் கணக்கற்ற ரத்தினம் முதலிய மணிகள் போன்றவை உனது ஸ்வரூபமென்னும் கடலில் குணங்கள் என்னும் மணிகள்.

சீலம் எல்லையிலே - அளவற்ற குணஸமூஹம். ஸ்வரூபம் அந்தமில் அமுதவாழி; குணம் - சீலம் எல்லையிலே; இரண்டும் அபரிச்சேத்யம்.

எல்லையில்லாத சீலம் தன்விஷயத்தில் செய்த மஹோபகாரத்தை மேல்வரும் அடிகளால் அநுஸந்திக்கிறார். முதலில் எங்கள் குற்றங்களைப் பாராது எங்களை ரக்ஷிக்கும் இறைவன் நீயேயன்றோ என்று பேசுகிறார். அடியவர் பிழைகள் நின் கருத்தடையாது அடைய ஆண்டருளும் அரசனும் நீயே— சிக்ஷையையே அறியாதநிலை அர்ச்சாவதாரம் ஒன்று தானே.

ஸம்ரக்ஷண தீக்ஷிதனான சக்கரவர்த்தித் திரு மகனும் குற்றம் கண்டு காகம்போல்வாரைத் தண்டிக்க முயன்றும் ராவணன்போல்வாரைத் தண்டித்துமே ரக்ஷித்தான். குற்றமே யறியாத அரும்பெருநிலை அடியவர்க்கு மெய்யனுகின்ற இவ்வர்ச்சாஸமாதியில்தானே காணக்கிடைக்கிறது.

அடைய - எல்லோரையும், எல்லாவற்றையும், ஆண்டு - ரக்ஷித்து, அருளும் - கிருபைசெய்யும், அரசனும் - சக்கரவர்த்தியும், நீயே - நீ ஒருவனே. 'அடைய' என்பதால் ஒன்றுகூட விடாமல், தேவதைகள் மனுஷ்யர்கள் திர்யக்குகள் என்ற பேதமில்லாமல் என்றபடி.

'அடியவர் பிழைகள் நின் கருத்தடையாது' என்பதால் அனைவரையும் காத்தருளுவதில் விலக்ஷணமான ஓர் அம்சம் பேசப்படுகிறது. அனைவருக்கும் அரசனான நீ அடியவர்களுக்கு விசேஷித்து அருள் புரிகிறாய்; அவர்களுடைய குற்றங்கள் உன் உள்ளத்தில் படுவதேயில்லை.

உயர்ந்த நீ உன்னை எம்முடன் கலந்தனை - சீலத்தின் கார்யம் இது. உயர்ந்த நீ - கீழே கூறப்பட்ட ஸ்வரூபரூப குணவிபவாதிகளை அநுஸந்தித்து, இப்படி உயர்ந்த (மேன்மைகளையுடையவனான) நீ, இப்படிப்பட்ட உன்னை, எம்முடன் ஒரு நீராகக் கலந்தனையே என்று ஆச்சர்யப்படுகிறார்.

'எம்முடன்' என்று தன்னை மற்ற ஸம்ஸாரிகளோடு சேர்த்துப் பேசுகிறார். "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பு" மான இந்நின்ற நீர்மையில் "எண்ணில் பல்குணத்த"னான அவன் வந்து கலந்த நீர்மைக்குத் தோற்றுப் பாசுரமிடுகிறார். கலந்தனை - கங்காப் பிரவாஹம்

தெருஜலத்தோடு கலந்ததுபோல் ஒரே படியாய்க் காணும்படி கலந்தாய். எங்கள் ஸுகதுக்கங்கள் உன்னுடைய ஸுகதுக்கங்களாகும்படி கலந்தனை. அவனது ஸௌசீல்யத்தை அநுஸந்தித்து ஸ்வாமி மன முருகி இந்தப் பாசுரம் பாடியிருக்கிறார் என்பதற்கு இந்த அடியொன்றே சான்றாகும்.

அயிந்தைமாநகரில் அமர்ந்தனை எமக்காய் - அவன் ஸௌசீல்யத்தை அநுஸந்தித்த பிறகு ஸௌலப்யகுணத்தில் ஈடுபடுகிறார். "பின்னானார் வணங்கும் சோதி" என்று திருமங்கை மன்னன் அநு பவித்தபடி. ராமகிருஷ்ணாத்யவதாரங்கள் செய்த போது உன்னைக் கண்டு அனுபவிக்கும் பாக்கியம் பெறாத எமக்காக இன்று நாங்கள் காண அயிந்தை யில் வந்து ஸ்திரமாய் எழுந்தருளியிருக்கிறாய். 'எமக் காய்' என்பதால் இவ்விதம் அவதரித்து நீ இங்கே எழுந்தருளியிருப்பது உனக்காக அன்று; ஸர்வவிதத் திலும் அது எங்களுக்காகவே என்றும் காட்டப்படு கிறது. 'எமக்காய்' என்றதால் இன்று இப்பாசுரத்தை ஓதும் நமக்கும் அருள்தர எண்ணி அயிந்தையில் நாதன் வந்து அமர்ந்திருக்கிறான் என்றபடி.

இப்படியாக எம்பெருமானுடைய ஸௌசீல்ய ஸௌலப்யங்களை அனுபவித்து உலகத்திலுள்ள தத்துவங்களுக்கெல்லாம் மேற்பட்டவன் அவன் என் பதை இரண்டடிகளால் பேசுகிறார்-

சித்திரமணி யெனத்திகழும் மன்னுருவில்
அத்திரமணியென அனைத்தும் நீ அணிதி.

தத்துவங்களில் இருபத்துநாலு வகைப்பட்ட அசேதனத்தையும் இருபத்தைந்தாவதான சேதனனை யும் ஸர்வேச்வரன் திருமேனியில் பூஷணங்களாயும் ஆயுதங்களாயும் அணிந்துகொண்டிருக்கிறன் என்று பிரமாணங்கள் கூறுகின்றன. இதையே நம்ஸ்வாமியி னுடைய "புருடன் மணிவரமாக" என்ற அதிகார ஸங்கிரஹப் பாசுரத்திலும், "தத்வை: அஸ்த்ர-விபூஷணை:" என்ற ஸங்கல்பஸூர்யோதயத்தின் மங்கள சுலோகத்திலும் காணலாம்.

மன்னுரு - ஸ்திரமான, நித்யமான, விக்ரஹம்.

சித்திரமணி என - அழகான மணி, கண்ணைக் கவரும் நீலரத்னம்போல் எம்பெருமானுடைய திரு மேனி திகழ்கின்றது.

பழைய ஸ்ரீகோசங்களிலெல்லாம் 'அணுகி' என்றே பாடமிருக்க, இங்கே "அணிதி" என்ற ஒரு பாடம் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. 'அணுகி' கிட்டி என்று அர்த்தம். பொருளும் பொருந்தவில்லை, அன்வயமும் பொருந்தவில்லை. 'தரித்து' என்று பலாத் காரமாகப் பொருள் கொள்ளவேண்டியிருக்கிறது. 'அணுகி' என்ற வினையெச்சத்தை மேல்வரும் 'அமர்ந்த' என்ற பதத்தோடாவது அல்லது 'அடைதி' என்ற பதத்தோடாவது அன்வயிக்கவேண்டும்.

இரண்டு பக்ஷங்களிலும் அர்த்தஸ்வாரஸ்யம் குறை வாகவே இருக்கிறது. 'அணிதி' என்று வினைமுற்றாக வைப்பது பாசுர அமைப்புக்கும் ஒத்ததாக இருக்கி றது; பொருளும் தெளிவாக இருக்கிறது. 'அடைதி' 'நிற்றி' 'வருதி' 'இன்புறுதி' 'மிகுதி' என்ற மேல் வாக் கியங்களின் போக்கைக் கவனித்தால் இதுவும் 'அணிதி' என்றே இருந்திருக்கவேண்டும் என்று தோன்று கிறது. 32 அடியுள்ள பாசுரத்தில் 16 அடிகள் இத் துடன் முற்றுப்பெறுகின்றன. வினைமுற்றே உசிதம் என்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும். மேல்வரும் அடிகளில் பஞ்சரூபங்கள் வர்ணிக்கப் பெறுகின்றன. விஷயம் வேறாகப் போகிறபடியால் அவற்றுடன் ஒட்டி அன்வயிக்கவேண்டிய 'அணுகி' என்னும் பாடம் அவ்வளவு ஸ்வாரஸ்யமாகத் தோன்றவில்லை. ரஸிகர்கள் ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

பாசுரத்தின் பிற்பகுதியில் பகவச்சாஸ்திரம் என்று கொண்டாடப்படுகிற பாஞ்சராத்ரத்தில் பரக்கப் பேசப்பட்ட எம்பெருமானுடைய பஞ்ச ரூபங்களைப் பேசுகிறார். முதலில் பரரூபம் -

விண்ணினு ளமர்ந்த வியனுரு

விண்=பரமபதம், அதில் அமர்ந்த, வியன்= பெரிய, அல்லது பெருமை வாய்ந்த, அல்லது ஆச்சர்யமான, உரு-விக்ரஹம். இதுதான் பரவாஸு தேவரூபம் என்றும் 'ஆதியஞ் சோதியுரு' என்றும்

கொண்டாடப்படும் திவ்ய மங்கள விக்ரஹம். அதனால் எண்ணிய ஈரிரண்டு உருக்களும் அடைதி— அதனால்=பரவாஸுதேவ ரூபத்தினால், எண்ணிய= ஸங்கல்பிக்கப்பட்ட, ஈரிரண்டு உருக்களும்= (வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன் என்று பிரஸித்தமான) நான்கு வ்யூஹரூபங்களையும், அடைதி=அடைகிறாய். இவற்றின் குணம் கார்யம் முதலியவற்றை ஸ்வாமியின் ரஹஸ்யக்ரந்தங்களிலிருந்து அறியலாம்.

இவ்வியூஹரூபங்களினுடைய அவாந்தர பேதங்களான கேசவன் முதலான பன்னிரண்டு ரூபங்களையும் அடுத்தபடியாகப் பிரஸ்தாவிக்கிறார். பன்னிரு நாமம்—கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் ஆகிய பன்னிரண்டு திருநாமங்கள்.

பல பல உருவாய் - இந்த நாமங்களுக்கு ஏற்பத் தனித்தனி பன்னிரண்டு ரூபங்கள் கொண்டு.

என்னுரு எய்தி - என் சரீரத்தில் நெற்றி, வயிறு, மார்பு, உட்கழுத்து, வயிற்றின் வலப்புறம், வலது புஜம், வலக்கழுத்து, வயிற்றின் இடதுபுறம், இடது புஜம், இடக்கழுத்து, முதுகு, பிற்கழுத்து என்னும் ஸ்தானங்களில் முறையே சேர்ந்து.

எங்கும் எய்தி - கிழக்கு, மேற்கு, ஊர்த்வம்

(மேல்புறம்), தெற்கு, வடக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு, கீழ்ப்புறம் என்ற எல்லாத்திசைகளிலும் சேர்ந்து.

நீ நிற்றி - நீ நிற்கிறாய்.

ஸ்வாமி அருளிச்செய்திருக்கும் 'பன்னிருநாமம்' என்ற பிரபந்தத்தில் இவ்விரிவுகளெல்லாம் காணலாம்.

[வியூஹங்களுக்கு 'அடைதி' என்றும் பன்னிரு நாமங்களுக்கு 'நிற்றி' என்றும், அவதாரங்களுக்கு 'வருதி' என்றும் பேசியவர் பரரூபத்திற்கு அப்படியாதொரு வினைச்சொல்லும் உபயோகிக்காத அழகும் ரஸமும் அனுபவிக்கத்தக்கன.]

விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்ற மூன்று வகையான அவதாரங்களைப் பற்றி மேலடிகளில் பேசத்தொடங்குகிறார். "மீனோடாமை" முதல் "கற்கியாய்" என்பது வரை விபவாவதாரங்கள்; "மற்றும்" தொடங்கி "இங்குற வருதி" வரை அர்ச்சாவதாரங்கள்; அடுத்த இரண்டு அடிகள் அந்தர்யாம்யாவதாரத்தைப் பற்றியவை.

மீன் - மத்ஸ்யாவதாரம்; ஆமை - கூர்மாவதாரம்; கேழல் - வராஹாவதாரம்; கோளரி - நரஸிம்ஹாவதாரம் (கோள் - வலிமை, அரி - சிங்கம்); வானார் குறள் - ஆகாசம் நிறைந்த வாமனன் (குறள் - குள்ளன், வாமனன்); 'வானார் குறள்' என்று திரிவிக்கிரம

ரூபத்துடன் வாமனனையும் சேர்த்து இரண்டையும் ஒரு சொற்றொடரால் பாசுரமிடும் அழகு கவனிக்கத் தக்கது. மழுப்படை முனி - பரசுராமன், (மழு= கோடரி, பரசு; படை - அதை ஆயுதமாக உடைய வர்);

பின்னும் இராமர் இருவராய் - ஸ்ரீராமனையும் பலராமனையும் சேர்த்துப் பேசுகிறார். 'பின்னால்' என்பது முன்சொன்ன பரசுராமனும் ஒரு ராமனா யிற்றே என்ற எண்ணத்தால்.

பாரில் துன்னிய பரந்தீர் துவரை மன்னனுமாய்-

கிருஷ்ணாவதாரம்; இவ்வவதாரத்தில் ஸ்வாமிக்கு உள்ள விசேஷ ஈடுபாடு வாக்கியத்திலேயே தோற்று கிறது. மேலும் பூமி ஒரு பசுவடிவங்கொண்டு அதர்ம மேலீட்டினால் தனக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தெரி வித்ததின்பேரில் ஸர்வேச்வரன் கிருஷ்ணாவதாரம் செய்தருளினான் என்கிற புராணப்ரக்ரியையைத் திரு வுள்ளத்தில் கொண்டு 'பாரில் துன்னிய பரந்தீர்' என்று பாடப்படுகிறது. துன்னிய - நிறைந்த; பரம் - சுமை; துவரை - துவாரகை. கலிதவிர்த்தருளும் கற்கி-மேல் வரப்போகும் அவதாரம்; கலியுகம் போய் கிருதயுகம் வரப்போவது அவர் அவதாரத்தாலே என்ற கொள்கையைக் காட்ட, 'கலிதவிர்த்து' என்று கூறப்பட்டிருக்கிறது.

"மற்றும்" என்று தொடங்கி எம்பெருமா

னுடைய அர்ச்சாவதாரங்களைப் பேசுகிறார். மத்ஸ்யம் கூர்மம் முதலிய விபவாவதாரங்களைப் போல இவை களும் எம்பெருமானுடைய அவதாரங்களே ஆகிலும் அவைகளைக் காட்டிலும் இவை பல அம்சங்களில் வேறுபட்டவை என்பதைக் காட்ட 'மற்றும்' என் கிறார்.

மற்றும் மலிவதற்கு - இன்னும் அதிக ஸுலப னாகி எல்லோருக்கும் எளியவனாவதற்கு. ராமகிருஷ் ணாத்யவதாரங்களின் ஸௌலப்யமும் பரத்வம் என்ன லாம்படியன்றோ அவன் அர்ச்சாவதார ஸௌலப்ய மிருப்பது. ஸர்வஸஹிஷ்ணுவாய் அர்ச்சக பராதீன மான அகில ஆத்மஸ்திதியையுடைய இந்த அர்ச் சையின் ஸௌலப்யத்தை அநுஸந்தித்து மஹான்க ளெல்லாம் மனமுருகி மயங்குகிறார்கள் என்று பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் வியந்ததை இங்கே நம்மாசார் யோத்தமன் ஸூசிப்பிக்கிறார்.

என்றும் வல்வினை மாற்ற - விபவாவதாரங்களைப் போல் தோன்றி மறையாமல் எப்போதும் ஸ்திரமாக நிற்கும் அர்ச்சாரூபங்கள் ஒரு காலத்தில் மட்டும் அநுஸரித்தவர்களுடைய வினைகளைப் போக்கின என் றில்லாமல் என்றும் ஆச்ரிதர்களுடைய கொடிய வினை களையும் போக்குவதற்காக என்று பொருள். பகவா னுடைய திவ்யமங்கள விக்ரஹம் சுபாச்ரயம் என்று கூறப்படுகிறது. பகவத்ஸ்வரூபம் போலன்றி த்யானத்

திற்கு யோக்யமாயிருப்பதால் அது ஆச்ரயமாகிறது; பாபத்தைப் போக்குவதாகையால் சுபமாகவும் ஆகிறது. 'திருவடி முதல் திருமுடி வரை புருஷோத்தமனது திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்தால் மஹாபாதகங்களெல்லாம் பறந்தோடிவிடும்' என்ற வசனத்தை நினைப்பூட்ட 'வல்வினை மாற்ற' என்று பேசப்பட்டிருக்கிறது.

இந்த வாக்கியத்தில் பல பாட பேதங்கள் காண்கின்றன. "நலிவதற்கெண்ணும் வல்வினை", "மலிவதற்கெண்ணும் வல்வினை", "நல்வினை" என்றே சில பாடங்கள் உள. எல்லாவற்றையும் சீர் தூக்கிப் பார்த்து "மலிவதற்கு என்றும் வல்வினை மாற்ற" என்ற பாடமே யுக்தமென்று தீர்மானித்து அதுவே இங்கு கொள்ளப்பட் டிருக்கிறது.

விபவாவதாரங்கள் பத்து என்று பொதுவாகச் சொல்லுகிறார்கள். அர்ச்சாவதாரங்களோ கணக்கற்றவை. அமைப்பும் வடிவமும் கூடப் பலவிதங்களாயிருப்பவை என்பதை "நானுவுருவம்" என்று காட்டுகிறார். பக்தனுடைய மனோரதத்திற்கு அநுகுணமாக வடிவங்களை ஸர்வேச்வரன் மேற்கொள்ளுகிறான். "தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே" என்று ஆழ்வார்கள் இதையே பாடுகிறார்கள்.

இப்படி அவன் பல்வேறு வடிவங்கள் எடுப்பது எதற்காக என்றால் "நல்லடியோர் வானோர் இன்பம்

இங்குற.'' ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களின் உயர்ந்த ரஹஸ்யம் இது. "விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவும் அடிமையெல்லாம் மண்ணுலகத் தில் மகிழ்ந்தடைகின்றனர்..நம்பண்ணமரும் தமிழ் வேத மறிந்தபகவர்களே'' என்று அதிகார ஸங்கிர ஹத்தில் அருளிச் செயல்களுக்குள்ள பெருமை கூறப் பட்டிருக்கிறது. ஸ்ரீவைகுண்டத்தில் நித்யஸூரிகள் எந்த இன்பத்தை அடைகிறார்களோ, அந்த இன்பம் (வான்=ஸ்ரீ வைகுண்டம், ஆர்=நிறைந்த), இங்கே தன்னை உபாஸிப்போருக்குக் கிடைக்கும்படி எம் பெருமான் அர்ச்சாரூபத்தோடு எழுந்தருளி யிருக் கிறான் என்று பொருள். 'நல்லடியோர்' என்பது அர்ச்சா ரூபங்களை உலோகத்தாலானவை என்று நினையாது இவை அப்ராக்ருதமான திருமேனிகளே என்ற தத்துவத்தை உணர்ந்து அவ்விதமே உபாஸிப் பவர்களைக் காட்டுகிறது.

வான் ஆர் இன்பம் இங்கு உற - பதங்களிலேயே வாசி தோற்றும்படி பாசுரம் பாடப்பட்டிருக்கிறது. வானிலுள்ள இன்பம் மண்மிசை ஏற்படும்படி என்று ஒரு சேராச் சேர்த்தியைப் பேசுகிறார். அந்த இன் பத்தை இங்கே பெற்றவர்கள் தான், "இங்கே திரிந் தேற்கு இழுக்குற்றென்?'' என்றும், "ஏரார் முயல்விட்டுக் காக்கைப் பின் போவதே'' என்றும், "இம்மைப் பிறவிசெய்யாதே இனிப்போய்ச் செய்

யும் தவம்தான் என்" என்றும் பாடவல்லவர்களானூர் கள். அந்தச் செந்தமிழாரணத்தின் வழியை யடியொற்றிய ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளில் இந்த மனோபாவத்தைத் திரும்பத் திரும்பக் காணலாம்.

"ஸ்வயம் ஸமுதிதம் வபு: தவ நிசாமயந்த: ஸதா

வயம் த்ரிதஶ-நிர்வ்ருதிம் புவி முகுந்த விந்தேமஹி" என்றும், "முக்தாநுபூதிம் இஹ தாஸ்யதி மே முகுந்த:" என்றும், 'ஸத்யம் சபே வாரண-சைல-நாத வைகுண்ட வாஸே பி ந மே பிலாஷ: என்றும் இந்தச் சந்தமிகு தமிழ் மறையோன் அருளிச்செயல்களில் பல இடங்களில் காண்கிறோம்.

வருதி - அப்படி மெய்யன்பர்கள் பேரின்பம் அடையும்படி நீ இங்கே, வருதி - வருகிறாய், இதனுல் உன் வரவுதான் அப்படிப்பட்ட பேரின்பத்தை அடைவிக்கிறது என்று தெரிகிறது.

இப்படி பரம் வியூஹம், விபவம், அர்ச்சை என்ற நான்கு ரூபங்களைப் பேசிவிட்டுக் கடைசியில் அந்தர்யாமி ரூபத்தைப் பற்றிப் பேசுகிறார்.

"திருவோடு ஒருயிர் உலகுக்கு என்னு நீ,
ஏருயிரெல்லாம் ஏந்தி இன்புறுதி" என்று.

"என் திருமகள் சேர்மார்பனே
என்னு மென்னுடை ஆவியே"

என்று ஆழ்வார் ஆத்மாக்களுள் ஒருவரான தமக்குப் பிராட்டியோடு கூடிய பகவானே அந்தர்யாமி ரூபமாக இருக்கிருன் என்று அருளிச் செய்தது ஆத்மவர்க்கங்கள் எல்லாவற்றுக்கும் துல்யம் என்பதை, "ஏருயிரெல்லாம் ஏந்தி" என்பதால் குறிப்பிடுகிருர். பிராட்டியும் நீயுமாக உலகனைத்துக்கும் ஓருயிராக இருக்கச் செய்தேயும், சேதனங்களுள் ஒவ்வொருவருக்குள்ளும் சூக்ஷ்மமான அந்தர்யாமி அவதாரமாக இருந்து அவர்களைத் தாங்கி அதனுல் ஆநந்தமடைகிருய். ஸ்வரூபத்தால் எல்லா வஸ்துக்களிலும் அந்த:பிரவேசம் செய்து நியமிக்கிறவன் திவ்யமங்கள விக்ரஹத்துடன் ஒவ்வொரு ஆத்மாவுக்குள்ளும் எழுந்தருளி யிருக்கிருன் என்பது இங்கே கூறப்படுகிறது. பிரஜைகள் இடர்ப்பட்டு 'அம்மா' என்று அழைத்தால் உடனே முகங்காட்டி ரக்ஷிக்க விரையும் வாத்ஸல்யம் நிறைந்த மாதா பிதாக்களைப் போல, என்றுகிலும் நம் பக்கல் இச்சேதனன் திரும்பியபோது அவனை ரக்ஷிக்க வேண்டுமென்ற ஆதரத்திஞல் அந்தர்யாமி ரூபமாய் எழுந்தருளி யிருக்கிருன்.

ஏருயிர்—விருத்தியடைகின்ற அல்லது அழகிய உயிர், அசேதனம் போலன்றிக்கே தர்ம பூதஜ்ஞாநத்தால் மேன்மேலெனப் பெருமையை அடைவது அல்லது ஜ்ஞாநாநந்தஸ்வரூபத்தால் ஜடமான பொருள்

களைக் காட்டிலும் அழகு பொருந்தியது. இந்த ஆத்ம வர்க்கங்களை யெல்லாம் தாங்கி.

'ஓருயிரெல்லாம் ஏந்தி' என்று சிலர் பாடம் கொள்வர். அதில் பொருள் நயமில்லாததோடு ஏந்தி என்பதுடன் மோனையுமில்லாமல் போகிறது.

திருவோடு சேர்ந்து நின்றபோதும் நீயும் அவளும் ஈருயிராயில்லாமல் ஒருயிராகவே விளங்குகிறீர்கள் என்று காட்ட 'ஒருயிர்' என்று பேசப்பட்டிருக்கிறது. ஓர்—ஒன்றான, ஒப்பற்ற என்று பொருள்.

இன்புறுதி - நல்லடியோர் இன்பமுற வருதி, என்று கீழே சொல்லப்பட்டது. இங்கே 'இன்புறுதி' என்று அவனுடையும் இன்பம் பேசப்படுகிறது. "தொண்டர் தங்கள் சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பு" என்றும், "மாசற்றார் மனத்துள்ளான்" என்றும் ஆழ்வார்கள் அனுபவித்த அனுபவங்களை யெல்லாம் திருவுள்ளத்தில் கொண்டு இங்கே இப்படி அருளிச் செய்கிறார்.

யாவருமறியாது எங்கு நீ கரந்து—எல்லா வஸ்துகளுக்குள்ளும் நீ வியாபித்திருக்கிறாய்; ஆயினும் ஒருவருக்கும் புலப்படுவதில்லை. கரந்து—ஒளிந்து "உடல் மிசை உயிரெனக் கரந்து" என்றும் "பாலுள் நெய்யேபோல் இவற்றுள் எங்கும் மறைந்துறைவாய்" என்றும் நம்மாழ்வார் அருளிச்செயல். இப்படி உள்ளே யிருக்கின்ற நீ வஸ்துக்களின் வெளியேயு.

மிருக்கிருயே என்ற ஆச்சர்யத்தைப் பேசுகிருர். "மேவுறச் சூழ்ந்த" என்று.

மே - மேன்மை; உற - ஏற்பட; சூழ்ந்து - வெளியே வ்யாபித்து. 'உள்ளேயும் வியாபித்து வெளியெங்கும் வியாபித்து' நிற்கும் நிலை "அந்தர்-பஹிஸ்-ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தித:" என்று உபநிஷத்தால் கொண்டாடப் பட்டபடியே இங்கேயும் கூறப்படுகிறது. இந்த ஆச்சரியமான நிலை உன் ஒருவனிடத்தில்தான் காணப்படுகிறபடியால் நீ அந்த வியப்பினுல், மிகுதி - மேம்பட்டவனுகிருய். "ஆஸ்சர்யவத் பஸ்யதி" என்று கீதாசார்யன் பாராட்டும் ஆச்சர்யம் இங்கே ஸ்வாமிக்கு ஏற்பட்டிருக்கிறது. 'வியப்பினுல் மிகுதி' என்னும் பதங்களைப் பாசுரம் முழுவதிலும் கூறப்பட்ட பகவானுடைய ஆச்சர்யமான ஸ்வரூபஸ்வபாவங்களைப் பற்றியதாகவும் வைத்துக்கொள்ளலாம். இத்துடன் இந்தப் பாசுரத்தில் வர்ணிக்கப்பட்ட எம்பெருமானின் இயல்பு முடிவடைகிறது. ஆகவே வியப்பில் முடிவது வியப்பில்லை.

கொண்டிட எம்மை அடைக்கலம் உலகில்
கண்டிலம் கதி உனையன்றிமற்ருென்றும்

"மழையிலெழுந்த" என்று ஆரம்பித்து இருபத்தெட்டு வரிகளால் எம்பெருமானுடைய

ஸ்வரூப ரூப குண விபவாதிகளை அனுபவித்து இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் மேன்மை பொருந்திய உன்னைத் தவிர எங்களுக்கு வேறு ரக்ஷகன் இல்லை என்று தம்முடைய நிர்ணயத்தை விண்ணப்பிக்கிறார். அடைக்கலம் - ரக்ஷிக்கப் படவேண்டிய பொருள். எங்களை ரக்ஷிப்பதற்கு உன்னைத் தவிர வேறு ரக்ஷகன் இல்லை. இப்படி வேறு ரக்ஷகன் இல்லா நிலையே 'அநந்யகதித்வம்' என்று கூறப்படுகிறது.

பல்வகை நின்ற படியனைத்தும்
தொல்வகை காட்டும் துணிந்து தூமறையே.

பல்வகைநின்ற = பலவிதங்களா யிருக்கும், உன் படியனைத்தும் - உனது ஸ்வரூப - ரூப - குண - விபவாதிகள் எல்லாப் பிரகாரங்களையும், தொல் வகை= பழைமையான வழியில் துணிந்து காட்ட வல்லது பரிசுத்தமான வேதம் ஒன்று தான்.

தூமறை - பரிசுத்தமான வேதம். இன்ன காலத்தில் இன்னார் இது செய்தார் என்று சொல்ல முடியாதபடி அபௌருஷேயமாய், 'எம்பெருமானுடைய மூச்சுக் காற்றுக்கள் தாம் வேதமாயின' என்று சொல்லியபடி பரிசுத்தங்களான வேதங்கள். இங்கே 'தூமறை' என்பதற்குத் தமிழ் மறை யென்ற பொருளும் கொள்ளலாம். இந்தப் பாசுரத்தின் ஆரம்பத்தில் வேதங்களை அருமறை என்று பிரஸ்தா

வித்து, அதன் பொருளை ஆய்ந்தெடுக்க வேண்டும் என்றும் கூறியிருக்கிறார். இங்கே 'துணிந்து தூமறை காட்டும்' என்ற பதங்களால் இது அந்த வேதங்களைக் காட்டிலும் வேறுபட்ட மற்றொரு வேதம் என்று கொள்ள வேண்டி வருகிறது. தவிரவும் யாதவாப்யு தயத்தில் 'உன்னுடைய ஒரு குணத்தின் ஒரு மூலையில் வேதங்களாகிற ஸ்துதிபாடகர்கள் ஓய்வடைந்து விட்டார்கள்' என்று கூறியிருக்கிற ஆசார்யன் உனது பல்வேறு பிரகாரங்களையும் மறைதான், காட்டவல்லது' என்றால் இது மற்றொரு மறையாதல் வேண்டும். வடமொழி வேதம் எம்பெருமானை அணுக மாட்டாது, 'அவனை அடையாது வாக்கு மன துடன் திரும்பி விட்டது' என்றுதான் பேசவல்லதா யிற்று. 'கண்டேன்' 'கண்டேன்' என்று ஆழ்வார் களைப் போல உத்கோஷிக்க வேத வேதாந்தங்களால் இயலவில்லை. கண்டவர்தாமே காட்டவல்லார். மாமலராள் தன்னொடு மாயனைக் கண்டமை காட்டுவது அவனைக் கண்ட ஆழ்வார்களின் அருளிச் செயலால் தானாகும். மேலும் 'துணிந்து' என்பதால், அபௌரு ஷேயமான வேதமும் அசக்யம் என்று கைவிட்ட விஷயத்தைக் காட்ட முற்பட்டால் அது துணிந்து செய்யும் கார்யம் என்பது ஸூசிப்பிக்கப்படுகிறது. 'தொல்வகை காட்டும்' என்ற பதச்சேர்த்தி வெகு அர்த்த புஷ்டியுள்ளது. காட்டும்போது, 'இது புதிது

புதிதாகக் கல்பிக்கப் பட்டது' என்று தோற்றுமல் வேதங்கள் முன் சென்ற வழியே சென்று பார்க்கப் பட்டதிது' என்று பார்ப்போர் மனத்தில் படும்படி காட்டுவது. "மதுரகவி தோன்றக் காட்டும் தொல் வழியே நல்வழிகள் துணிவார்கட்கே" என்ற அதிகார ஸங்கிரஹப் பாசுரச் சொற்றொடருடன், "தொல் வகை காட்டும் துணிந்து தூமறையே" என்பதைச் சேர்த்துப் பார்த்து ரஸிகர்கள் பலரஸமான அர்த்தங்களையும் அனுபவிக்கலாம்.

தூமறையி னுள்ளம் துளங்காத் துணிவுதரும்
ஆமறிவால் ஆர்ந்தடிமை யாகின்றோம்—பூ
மறையோன்
பாரா யணத்தில் பணியும் அயிந்தைநகர்
நாரா யணனுக்கே நாம். (5)

தூமறையின் - பரிசுத்தமான வேதத்தினுடைய
உள்ளம் - தாத்பரியம்
துளங்கா - ஸம்சயம் அடையாமல்
துணிவு தரும் - (நிச்சயம் இது என்ற) உறுதியான எண்ணத்தைத் தரும்
ஆம் அறிவால் - தகுந்த (வேதாந்த) ஞான விசேஷத்தால்
ஆர்ந்து - நிறைந்து

அடிமையாகின்றோம் - (நாம்) தாஸர்களாக ஆகின்றோம். (யாருக்கு எனில்)

பூமறையோன் - தாமரைப் பூவில் உண்டானவனும், எப்போதும் வேதாத்யயனம் செய்துகொண்டிருக்குமவனுமான ப்ரஹ்மாவினுடைய

பாராயணத்தில் - (வேத) பாராயணத்தில்

பணியும் - நமஸ்கரிக்கப்படும் (தெய்வமான)

அயிந்தைநகர் - திருவஹீந்திரபுரத்தில் (எழுந்தருளியிருக்கிறவனான)

நாராயணனுர்க்கே - நாராயண சப்த ப்ரதிபாத்யனுன எம்பெருமானுக்கே

நாம் - (அடிமையாகின்றோம் என்பதோடு அன்வயம்).

நான்காம் பாசுரத்தில் பெருமாளுடைய ஸ்வரூப ரூப குண விபவங்களை உபய வேதாந்தங்களும் கொண்டாடும்படியை விரிவாய்ப்பேசி ஐந்தாவதான இப்பாசுரத்தில் அப்படிப்பட்ட எம்பெருமானோடு நமக்கு உணரவேண்டிய ஸம்பந்தத்தை உபபாதிக்கிறார். நாம் அவனுக்கு அடிமையாகிறோம். இதுவும் நமக்கு உபய வேதாந்தம் காட்டிக் கொடுக்கும் ஓர் அர்த்த விசேஷம் என்பது இப்பாசுரத்தின் திரண்ட பொருள். இப்பாட்டில் ஸ்தல புராணமும் ஒருவாறு ஸூசிப்பிக்கப்படுகிறது.

"தூமறை துணிந்து காட்டும்" என்றார் கீழ்ப் பாட்டில்; இதில் காட்டுவதோடு நில்லாமல், நல்ல அர்த்தங்களை அறிந்து அனுஷ்டிக்க வேண்டிய துணிவையும் அது நமக்கு அளிக்கிறது என்கிறார்.

உள்ளம்—ஹ்ருதயம். தூமறையின் உள்ளமாவது வேதாந்தங்களின் உண்மையான தாத்பரியம். இது ஆமறிவு - இதுவாகிற, அல்லது, இத்தால், ஏற்படும் அறிவு; 'ஆம்' என்பது 'அல்ல' என்பதற்கு எதிர்ச்சொல்லாய், 'உண்டு' என்கிற ஆஸ்திக்ய புத்தியைச் சொன்னபடி யாயினுமாம். அதாவது 'ஒன்றும் இல்லை' என்று கூறும் ஸித்தாந்தங்களைத் தவிர்ந்து 'எல்லாம் உண்டு—தெய்வம் உண்டு, அதற்குக் கல்யாண குணங்களும் உண்டு' என்று பேசும் அறிவாளிகளின் ஸித்தாந்தத்தைச் சேர்ந்து, என்று பொருள். ஆஸ்திக்ய புத்திதான் துளங்காத்துணிவைத் தரக் கூடியது.

'உள்ளம் துளங்காத் துணிவுதரும் தூமறையின் ஆமறிவால்' என்று அன்வயித்தும் பொருள் கொள்ளலாம் எனத் தோன்றுகிறது. அநாதிகாலமாக ஸம்ஸரித்துப் போந்து மீண்டும் நமக்கு என்ன துர்க்கதிகள் வருமோ என்று துளங்கும் (அஞ்சும்) நமக்கு அவ்வண்ணம் அஞ்சவேண்டாதபடி வேதாந்தங்களின் ஹ்ருதயஸ்தானங்களான தத்துவ ஹித புருஷார்த்தங்களின் அறிவால் (ஞானத்தால்) ஆர்ந்து

(நிறைந்து) நமக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனுக்குத் தாஸபூதர்களாகக் கடவோம் நாம்.

தூமறையை 'ஸம்ஸ்கிருதவேதமாகக்' கொண்ட போது தூமறையனைத்தும் பார்த்தால் கலக்கமேற் படக் கூடுமெனினும் அதன் உள்ளத்தைப் பார்த்த போது துளக்கம் நீங்கித் துணிவு (ஸுநிச்சயம்) ஏற்படும் என்று பொருள் கொள்ளுதலும், தூமறை யைத் தமிழ்மறையாகக் கொண்டபோது 'உள்ளம் துளங்காத் துணிவுதரும் தூமறையின் ஆமறிவு என்று அன்வயித்து 'மிகுந்த தெளிவுடன் அருளிச்செயல்கள் காட்டிக் கொடுக்கும் அர்த்த விசேஷம்' என்று பொருள்கொள்ளுதலும் உசிதம்.

ஆர்ந்து—நிறைந்து; அல்லது மகிழ்ந்து அநுப வித்து. அறிவால் ஆர்ந்து—அறிவு நிறைந்து அடிமை யாகின்றோம்; அல்லது அறிவால் மகிழ்ந்து (அனுபவ பூர்த்தியோடு) அடிமையாகின்றோம். இவனுக்கு அடிமைத் தொழில் செய்வதிலும் இனியது வேறில்லை என்ற ஞானத்துடன் அடிமையாகின்றோம். "அங்க ணுயகர்க்கு இன்று அடிமைத் தொழில் பூண்டாயே" என்று கொண்டாடத்தக்க நிலையாயிற்றே அது.

அடிமையாகின்றோம்—நமது சேஷத்துவமும் அவ னுடைய சேஷித்துவமும் நமது ஸம்பிரதாயத்தின் முக்கியமான அர்த்தங்கள். சேதனன் சேஷத்வத்தை வஹித்தபோது தாஸனுகிறுன். அப்போது சேஷி

ஸ்வாமியாகிருன். இளையபெருமாள் அனுஷ்டித்துக் காட்டிய தாஸ்யம் (அடிமை) தான் இங்கே காட்டப் படுகிறது. ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்தத்தின் அடிப் படையான இந்த தாஸ்யம்தான் ஆழ்வார் ஆசார்யர் கள் ஸ்ரீஸூக்திகளில் பரக்கப் பாராட்டப்பட்டி ருக்கிறது. அடிமையாகின்ருேம் என்று தாஸவர்க்கங் களை முற்பாதியால் பேசிப் பாசுரத்தின் பிற்பாதியில் அவ்விதம் அடிமைகொள்ளுமவனுன ஸ்வாமியின் நிலையைப் பேசுகிருர்.

பூமறையோன்—..........நாராயணனுர் என்று. பூவிலுதித்தவனும் மறையை இடைவிடாது சொல்லி வருபவனுமான ப்ரஹ்மா பணிகிருன். இத்தால் எம் பெருமானுடைய மேன்மை சொன்னபடி.

நாராயணனுர்—அவன் ஸர்வத்துக்கும் இருப்பிடம் என்றும் ஸர்வத்தையும் இருப்பிடமாக உடையவன் என்பதும் இத்தால் கூறப்படுகிறது. இவன் இருக்கு மிடம் அயிந்தைநகர். நமக்கு ஸ்வாமியானவன் நம்மை அடிமை கொள்வதற்காகவே அமர்ந்த அயிந்தை.

பாராயணத்தில்—பாராயண காலத்தில் அல்லது பாராயணத்தால் - பாராயணம் செய்வதால். பாராய ணம் செய்யுமவர்கள் அவரவர்கள் இஷ்ட தேவதை யைப் பணிந்து பின்னரே பாராயணத்தைத் தொடங் குவது மரபு. இங்கே ப்ரஹ்மா பாராயணம் செய்யும்

போது பணிவது அயிந்தை நகரை அலங்கரிக்கும் தேவநாதனையேதான் என்று காட்டப்படுகிறது.

இங்குப் 'பாராயணம்' என்ற சொல்லை உபயோகித்ததால் அர்த்தஜ்ஞானமோ அநுஸந்தானமோ இல்லாமல் பாராயணத்தை மட்டும் செய்வதும் மிக்க பயனளிக்குமென்று தெரிகிறது.

'பணியும்' என்னும் சொல் 'நாராயணனூர்' என்னும் சொல்லோடு மட்டுமில்லாமல் 'அயிந்தை நகர்' என்பதோடும் அந்வயிக்குமாறு அமைக்கப்பட்டிருக்கிறபடியால் வேறொரு பொருளும் தோற்றுகிறது. "பூமறையோன் பாராயணத்தில் பணியுமயிந்தைநகர்" என்று நகரைப் பிரமன் பணிகிறான் என ஓர் பொருளையும் கவி உத்தேசித்தே யிருத்தல் வேண்டும். ஏனெனில் திருவயிந்திரபுர ஸ்தல புராணத்தில் ப்ரஹ்மா ஸௌகந்த்யவனம் என்ற பேர்கொண்ட இந்த ஸ்தலத்திற்கு வந்தபோது ஓர் அசரீரவாக்கு ஏற்பட்டதாகவும் அதன் சொற்படி இவ்வூரில் தவமிருந்து பெருமாளை ஸாக்ஷாத்கரித்துத் தமது லோகத்தை மீண்டும் அடைந்ததாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இதை யொட்டி அங்கே யிருக்கும் மலைக்கு ப்ரஹ்மாசலம் என்று பெயர் வழங்குகிறது. ஸ்வாமியும் "ப்ரஹ்மாசலே ச பஹுமாந-பதே முநீநாம்" என்று அனுஸந்தித்திருக்கிறார்.

நாராயணனுர்க்கே—இந்த 'ஏ' காரத்தின் பெருமை சொல்லுந்தரமன்று. "உனக்கே நாம் ஆட் செய்வோம்" என்ற நாச்சியார் அருளிச் செயலின் ரஸம் முழுவதையும் காட்டவேண்டி "நாராயண ஞர்க்கே நாம் அடிமையாகின்ருேம்" என்று அதை மொழிபெயர்த்தருளிச் செய்தபடி. நமது அநந்ய சரணத்வம் (வேறு புகலில்லாமை) இதனுல் வெளியாகிறது.

நாம்=அடிமைப்பட்டவுடன் பெருமை உண்டா இறதென்று சொல்லிலேயே விளங்குகிறது. 'அடியோம்' என்ற அநுஸந்தானம் நிற்க இங்கே அவனுக்கு அடிமைப்பட்டதால் ஏற்பட்ட ஸாத்து விகாஹங்காரம் பிரகாசிக்கிறது. 5.

ஆர்க்கும் கருணை பொழிவான்
அயிந்தையில் வந்தமர்ந்த
கார்க் கொண்டலைக் கண்ட
காதற் புனமயில், கண் பனியா
வேர்க்கும் முகிழ்க்கும் விதிர்விதிர்க்கும்
வெள்கி வெவ்வுயிர்க்கும்
பார்க்கின்றவர்க்கிது நாம்
என்கொல் என்று பயிலுவமே. (6).

ஆர்க்கும் - யாருக்கும், அதாவது யாவருக்கும், (எல்லோருக்கும்)

கருணை பொழிவான் - கிருபையை வர்ஷிக்க வேண்டி அல்லது வர்ஷிப்பானொருவனாகி

அயிந்தையில் வந்து அமர்ந்து } திருவயிந்திர புரத்தில் வந்து அங்கேஸ்திரமாகத் தங்கிய

கார்க் கொண்டலைக் கண்ட } கருமை நிறம் கொண்ட மேகத்தை பார்த்த (கார்மேக வண்ணனை தேவநாதனை ஸேவித்த என்றபடி)

காதல் - (அதனால்) காதலை யடைந்த

புனமயில் - காட்டிலுள்ள மயில் (இங்கே மயிலின் அழகை யுடைய இந்தப் பெண்)

கண்பனியா - கண்ணினின்றும் நீர்த்துளி அரும்பா நின்று கொண்டு

வேர்க்கும் - உடல் முழுவதும் வேர்க்கப் பெறுவாள்;

முகிழ்க்கும் - மயிர்க்குச்செறிவாள்;

விதிர்விதிர்க்கும் -நடுநடுங்குவாள்;

வெள்கி - வெட்கத்தை யடைந்து

வெவ்வுயிர்க்கும் - வெப்பமான பெருமூச்சுவிடுவாள்;

பார்க்கின்றவர்க்கு - (இந்தப் பெண்ணின் இத்த
கைய அவஸ்தைகளைப்)
பார்க்கின்றவர்களுக்குத்தான்

இது என் கொல் என்று } இந்த நிலைமை என்ன என்று

நாம் பயிலுவம் - நாம் சொல்லக்கடவோம்? (இன்ன தென்று சொல்லத் தெரிய வில்லையே என்றபடி)

"கண்டு வணங்கினர்க்கு என்னுங் கொல்" 'பெருமாளை நேருக்கு நேராகக் கண்டு ஸேவிப்போர் தசை என்னவாகும்?" என்று திருமழிசை யாழ்வார் ஒரு பாசுரத்தில் கேட்கிறார். அதற்கு ஸ்ரீமந்நிகமாந்த தேசிகன் இந்தப் பாசுரத்தில் ஸமாதானம் சொல்லுகிறார் போலும். "பூயோபூய: புளக நிசிதை:" என்று தொடங்கும் ஸ்ரீ வரதராஜபஞ்சாசத் ச்லோகத்தை இதனுடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

"சாஸ்திர-ஜந்ய - தத்துவஜ்ஞான - கர்மயோகாதி பரம்பரையாலே பிறந்த பரபக்தியானது ஸாக்ஷாத்கரிக்க வேண்டும் என்கிற அபிநிவேசத்தை யுண்டாக்கி, "காணுமாறருளாய்" என்று விலபிக்கும்படி பண்ணி, இவ்வபேக்ஷாமாத்ரமடியாக வந்த பகவத்ப்ரஸாத விசேஷத்தாலே தத்காலநியதமான பரிபூர்ண ஸாக்ஷாத்காரத்தை யுண்டாக்கும். இஸ்ஸாக்ஷாத்

காரம் பரஜ்ஞானம் என்று பேசப்பட்டது.” இவை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார பங்க்திகள். அந்த பரஜ்ஞான தசையைச் சித்திரிக்கிறது இப்பாசுரம்.

பிராட்டியைச் சரணமடைந்து, ஸாத்விகத்யாக புரஸ்ஸரமாகப் பெருமாளுடைய ஸ்வரூபரூபகுண விபவாதிகளை யெல்லாம் உள்ளபடி அறிந்து, ஆகமம் காட்டியபடியே உணர்ந்து, அவனுக்கு அடிமையான தின் பலனாக ஸ்ரீ தேவநாதன் ஸ்ரீ தேசிகனுக்குத் தன் வடிவழகைக் காட்டிக் கொடுக்க, அதனால் உண்டான அனுபவம் மேலிட்டு ஒரு பிராட்டி (நாயிகா) தசையை யடைந்து அந்த அனுபவங்களை யெல்லாம் இப்பாசுரத்தால் பேசுகிறார்.

காட்டில் ஸ்வேச்சையாக ஸஞ்சரிக்கும் மயில் மேகத்தைக் கண்டதும் மிகக்களித்துத் தோகையை விரிப்பது நர்த்தனம்செய்வது இவை போன்ற பல செய்கைகளைச் செய்யும். அதுபோல் இந்த மயில் போன்ற ஸ்திரீயும் எம்பெருமானாகிய கார்மேகத்தைக்கண்டு பலபடியான நிலைகளை அடைகிறாள். மயிலைப்போல் அழகுடைமைபற்றி அத்தகைய உத்தம ஸ்திரீகளை ‘மயில்’ என்று பேசுவது முறை. புனம் என்றால் காடு. புன மயில் என்றால் காட்டில் தன்னிச்சையால் விஹரிக்கும் மயில் என்று பொருள்.

“புனமயிலே! போதராய்” என்ற ஆண்டாள் அருளிச் செயலை நினைப்பது. இங்கே “காதல் புன

மயில்''—காதல் என்னும் காட்டிலே ஸஞ்சரிக்கும் மயில் போன்ற ஸ்திரீ.

இவள் கண்டது கார்க்கொண்டல், அதாவது மழை காலத்து மேகம்; வெளுத்த மேகமாயிராமல், நீருண்டு கறுத்து அழகாயிருக்கிறது. மேகங்கள் மலையினிடத்தே தங்கும். இங்கே ஒஷதாத்ரி என்னும் மலையையுடைய அயிந்தையில் வந்து அமர்ந்ததாம் இந்தக் காளமேகம். மேகங்கள் வந்தவுடன் மழை பெய்யும். அவ்வண்ணமே இந்தக் காளமேகமும் கருணையை வர்ஷிக்கிறது. மழை எல்லோருக்கும் பெய்யும் என்று பிரஸித்தம். அப்படியே இந்தக் கருணைமழையும் இன்னார் இனியார் என்று வித்தியாஸம் பாராமல் யார்க்கும் பொழியும். 'ஆர்க்கும்' என்ற பதத்திற்கு 'யாவருக்கும்' என்றும் 'சப்திக்கும்' என்றும் பொருள்களைக் கொள்ளலாம். 'ஆர்க்கும் கார்க்கொண்டல்' — ''வலம்புரிபோல் நின்றதிரும்''. இடிமுழக்கத்துடன் கூடிய மேகம் என்று அர்த்தமாகிறது. 'ஆர்க்கும் கருணைபொழிவான் . . வந்தமர்ந்த' என்ற சொற்றொடரால் எல்லோருக்கும் தனது க்ருபையை வர்ஷிப்பதற்காகவே வந்து அமர்ந்த படியைக் கவி கூறுகிறார்.

இந்த ஆருவது பாசுரமும் நாயிகாபாவத்தில் அமைந்திருக்கிறது என்பது முன்னமே சொன்னோம். ஸ்ரீதேவநாதனை ஸேவித்த ஒரு பெண்ணின் தசை

யைக் கவி வர்ணிப்பதைத் தமிழ் மரபை யொட்டி அவள் தாயார் பேசுவதாக வைத்து இப்பாசுரம் அவதரித்திருக்கிறதாயும் கூறுவர். அப்படியாயின் "நங்கைமீர் நீரும் ஓர் பெண் பெற்று நல்கினீர், எங்ஙனே சொல்லுகேன் யான் பெற்ற ஏழையை" என்ற நம்மாழ்வார் அருளிச்செயலைப் பின்பற்றிய தாகக் காண்கிறது இந்தப் பாசுரம். 'நான் என்ன வென்று சொல்லுவேன் இவளுடைய அவஸ்தைகளை' என்பதுதான் இரண்டு பாட்டுக்களின் போக்கும்.

அவன் கார்க்கொண்டல்; இவள் காதற் புனமயில். காண்போர் தாபத்தைப் போக்கும் குளிர்ந்த திருமேனியும் அதன் அழகும் அவன் விஷயத்தில் பிரஸித்தங்களாயிருக்குமாப் போலே இவளுடைய காதலும் (பக்தியும்) பிரஸித்தம்.

ஆசைக்கு விஷயமான நாயகனை ஆசையை யுடைய நாயகி நேருக்கு நேராகக் கண்டால் படும் பாடுகளை மேல் வர்ணிக்கிறார்.

கண்பனியா வேர்க்கும் - கண்களில் நீர்த்துளிகள் அரும்பிப் பனித்திவலைகள்போல் பிரகாசிக்கின்றன. "புண்டரீக பலாஶாப்யாம் விப்ரகீர்ணம் இவோதகம்" என்று இந்த அழகைத் திருவடி அனுபவிக்கிறார். பனியா - பனிப்ப. பனியைச் சொன்னபடியால் குளிர்ச்சி சொல்லப்பட்டது. ஆனந்தபாஷ்பம் குளிர்ந் திருக்கும். வேர்க்கும் - கண்கள் தாம் நீரைப் பெருக்கு

கின்றன வென்றால், உடல் முழுதும்கூட வேர்வை விடுகிறது.

முகிழ்க்கும்—மயிர்க்குச்செறிகிறது. இது புதிதாக ஏற்பட்ட ஸம்ச்லேஷானுபவத்தைக் காட்டுகிறது. "நவ - ஸங்கம - ஸவ்ரீடா:"—புதிதாக ஏற்பட்ட ஸங்கமத்தாலே நாணமுற்ற நாயகியினுடைய லக்ஷணங்கள் இவை எல்லாம்.

விதிர் விதிர்க்கும்—நடுநடுங்கும்; இன்பமேலீட்டினால் நடுங்கும். அல்லது அவன் பெருமையையும் தன் சிறுமையையும் எண்ணி நடுங்கும் என்றுமினுமாம்.

வேள்கி வேவ்வுயிர்க்கும்—வெட்கிப் பெருமூச்சு விடும். வெட்கமும் தன் நிலைமையை எண்ணியே. அதாவது எல்லா விதத்திலும் கீழ்ப்பட்டவளான தன்னை எல்லாவிதத்திலும் மேற்பட்டவனான ஸர்வேச்வரன் விரும்பிவந்து ஸம்ச்லேஷம் கொடுத்துப் பெரும்பேறு பெற்றானாய் நிற்பதைக்கண்டு இப்பெண் வெட்கமடைகிறாள் என்றபடி.

"த்வய்யச்யுதாவிசதி சித்தம் அபத்ரபம் மே" என்றும் "நாணமில்லாச் சிறுதகையேன் நான் இங்கலற்றுவதென்" என்றும், "மாம் அலஜ்ஜம்" என்றும் அவனை ஆசைப்படுவதெல்லாம் வெட்கங்கெட்ட தன்மையைக் காட்டுகிறதென்று அனுஸந்திப்பது

இயல்பு. அவனை நேருக்கு நேராகக் கண்டபோது, "ஆடிக்காண்பன் பாடியலற்றுவன் தழுவல்வினையால் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன்" என்று ஆழ்வார் அனுசந்தித்த படியே நாணம் மேலிடுவதும் ஸஹஜம். இங்கே இந்தப் பெண்ணும் பெருமாளை ஸேவித்தபோது முதலாக இன்பத்தை நுகர்ந்து பிறகு தன்னிலையை யெண்ணி வெட்கிப்போய் நமக்கு இவன் எப்படி பதியாகப் போகிறான் என்கிற ஏக்கத்தால் வெவ்வுயிர்க்கும் - உஷ்ணமான நீண்ட பெருமூச்சு விடுகிறாள். இந்தப் பாசுரத்தில் அவனைப் பெற்றதா லுண்டான ஸம்ச்லேஷாநந்தமும் அவனைப் பெறாது போய் விடுவோமோ என்று நினையும்போது ஒரு நடுக் கமும் ஒருங்கே தோற்றக் கிடக்கின்றன. இத்தகைய பாசுரங்களை அவரவர்கள் தந்தாம் உள்ளத்தில் இட்டு அனுபவித்து அர்த்தம் காண வேண்டுமே யன்றி ஒருவர் உணர்த்த உணரற்பாலதன்று. ஆசார்யோத் தமன் எம்பெருமானை அனுபவித்து, அவ்வனுபவத் தால் உண்டான ப்ரீதியின் பரீவாஹமாக அனுப வித்தபடியே பேசின பாசுரம் இது என்று சொல்ல வும் வேண்டுமோ?

"இப்படி இவள் அடையும் தசைகளை யெல்லாம் பார்க்கின்ற அயலார் 'அவை என்ன' என்று கேட்கி றார்கள். நான் என்ன சொல்வது? உலகத்திலே காணும் நடத்தைக்கு மாறாக உள்ள இந்தத் தசை

களை நான் என்ன வென்று எடுத்துரைப்பது?" என்ற வினாவில் பாசுரம் முடிகிறது.

பக்த்யதிசயத்தால் பெரியோர்களுக்கு உண்டாகும் அனுபவங்களும் ஏற்படும் நிலைகளும் பிறருக்கு விளங்கா. அவற்றைக் கண்டு அதிசயிக்கும் உலகோரை நோக்கி ஆழ்வாரும் "என் நெஞ்சினுல் நோக்கிக் காணீர்" என்றே சொல்ல வல்லவரானுர். ஆக ஆழ்வார் தேசிகன் இவர்கள் தசை நமக்கு வந்தபோதே நாம் இவற்றை யறியவல்லோம் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். 6.

பயின்மதி நீயே பயின்மதி தருதலின்
வெளியும் நீயே வெளியுற நிற்றலின்
தாயும் நீயே சாயை தந்துகத்தலின்
தந்தையும் நீயே முந்தி நின்றளித்தலின்
உறவும் நீயே துறவா தொழுகலின்
உற்றதும் நீயே சிற்றின்பமின்மையின்
ஆறும் நீயே ஆற்றுக்கருடலின்
அறமும் நீயே மறநிலை மாய்த்தலின்
துணைவனும் நீயே யிணையிலையாதலின்
துய்யனும் நீயே செய்யாளுறைதலின்
காரணம் நீயே நாரண ஞதலின்
கற்பகம் நீயே நற்பதம் தருதலின்

இறைவனும் நீயே குறையொன்றிலா
[மையின்
இன்பமும் நீயே துன்பந் துடைத்தலின்
யானும் நீயே என்னுள் உறைதலின்
எனதும் நீயே யுனதன்றியின்மையின்
நல்லாய் நீயே பொல்லாங்கிலாமையின்
வல்லாய் நீயே வையமுண்டுமிழ்தலின்
எங்ஙனமாகு மெய்யநின் வியப்பே
அங்ஙனே யொக்க அறிவதாரணமே. (7)

| | |
|---|---|
| பயின்மதி தருதலின் | மேன்மேல் வித்யைமுதலியவற்றைக் கற்கும் புத்தியைத் தருவதால் |
| பயில்மதி நீயே | சிக்ஷையினுல் வரும் புத்தி யென்று சொல்லக்கூடியவன் நீ தான். |
| வெளியுற நிற்றலின் | (எனக்கு) புறம்பேயுள்ள வஸ்துக்களாய் நிற்பதால் |
| வெளியும் நீயே | வெளிப்பட்டவஸ்துவும் நீ தான். |
| சாயை தந்து உகத்தலின் | நிழலைக் கொடுத்து அதனுல் ஸந்தோஷம் அடைவதால் |

தாயும் நீயே - எனக்குத் தாயும் நீ தான்.
முந்தி நின்று - முன்பே வந்து நின்று

அளித்தலின் - கொடுத்துக் காப்பதால்
தந்தையும் நீயே - எனக்குப் பிதாவும் நீயே.
துறவாது ஒழுகலின் } (ஒருகாலும்) கைவிடாத நிலையையுடைய வனுகையால்
உறவும் நீயே - (ஸர்வவித)பந்துவும் நீயே.
சிற்றின்பம் இன்மையின் } நீ சிற்றின்ப மில்லாமையால்
உற்றதும் நீயே - எனக்கு வகுத்த புருஷார்த்தமும் நீதான்.
ஆற்றுக்கு - (ஒரு பயனைப் பெற அனுஷ்டிக்கும்) உபாயத்திற்கு
அருள்தலின் - பலனை அளிப்பதால்
ஆறும் நீயே - (உண்மையில்) உபாயம் என்பது நீதான்.
மறநிலை - அதர்ம வழிகளை
மாய்த்தலின் - ஒழித்தலால்
அறமும் நீயே - உண்மையான தர்மம் நீயே.
இணையிலையாதலின் } உனக்குச் சமமானவர் வேறெவரு மில்லாத படியால்
துணைவனும் நீயே - உற்ற துணைவனும் நீயே.
செய்யாள் - பெரிய பிராட்டியார்
உறைதலின் - (உன்னிடத்தில்) நித்தியமாக வஸிப்பதால்

துய்யனும் நீயே - பரமபரிசுத்தனும் நீயே.

நாரணன் ஆதலின் } 'நாராயணன்' என்னும் சொல்லால் கூறப்படுபவனாதலால்

காரணம் நீயே - (எல்லா வற்றுக்கும்) காரணம் நீ தான்.

நற்பதம் தருதலின் - நல்ல உயர்ந்த வாழ்வைக் கொடுப்பதால்

கற்பகம் நீயே - கற்பகவ்ருக்ஷம் நீதான்.

குறை ஒன்றிலாமையின் } ஒருவிதமான குறைவும் இல்லாதவனாகையால

இறைவனும் நீயே } (எல்லோருக்கும்) மஹாராஜனும் நீயே.

துன்பம் துடைத்தலின் } துன்பத்தைப் போக்குவதால்

இன்பமும் நீயே } இன்பம் எனப்படுவதும் நீதான்.

என்னுள் உறைதலின் } எனக்குள்ளே அந்தராத்மாவாக வஸிப்பதால்

யானும் நீயே - 'நான்' என்று கூறப்படும் ஆத்ம வஸ்துவும் நீயே.

உனதன்றியின்மையின் } உன்னுடையதல்லாமல் (உலகில்) வேறு ஒரு பொருளும் இல்லாமையால்

எனதும் நீயே - என்னுடையது என நான் அபிமானிக்கும் பொருளும் நீதான்.

பொல்லாங்கு இலாமையின் } ஒருவிதத் தீங்கும் (உன்னிடம்) இராமையால்

நல்லாய் நீயே - நீதான் நல்லவன்.

வையம் உண்டு உமிழ்தலின் } உலகத்தை எல்லாம் (ப்ரளய காலத்திலே) விழுங்கி (ஸ்ருஷ்டி காலத்தில்) உமிழ்வதால்

வல்லாய் நீயே - (மிகுந்த) சக்தியுள்ளவன் நீயே.
மெய்ய! - (அடியவர்க்கு) மெய்யனே!
நின் வியப்புஏ - உன் ஆச்சர்யமான தன்மை
எங்஼னம் ஆகும் - எவ்வண்ணம் ஆகுமோ
அங்஼னமே ஒக்க - அவ்வண்ணமே பொருந்துமாறு
அறிவது - உணரவல்லது
ஆரணமே - வேதம் ஒன்றுதான்.

எம்பெருமானுடைய ஸ்வரூபரூப குணவிபவாதிகளை யெல்லாம் தூமறை காட்டியபடியே தாம் கண்டதை நான்காவது பாட்டிலே பேசிய ஆசார்யன் அடுத்த அகவலான இந்த ஏழாவது பாசுரத்தில் உலகிலுள்ளவை யெல்லாம் அவனே என்று அற்புதமான அவனது பெருமையை அனுஸந்திக்கிறார்.

பயின்மதிநீயே பயின்மதி தருதலின் - 'பயிலுதல்' என்ற சொல்லுக்கு சொல்லுதல், அப்யஸித்தல் அல்லது பழகுதல் என்று பொருள். மதியாவது ஞானம். இது ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகவும் குண மாகவும் இருக்கிறது. (ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா). மேன்மேலும் பயின்று (பழகி) விருத்தி யடையக் கூடிய ஞானத்தை இவ்வாத்மாவுக்கு நல்குகிற படியால் அந்த ஞானமும் நீயே. உன்னையே ஞானம் என்று சொல்ல வேண்டும் என்று கொண்டாடுகிறார்.

"பயில்மதி தருதலின்" என்பதில் 'பயில்மதி'யை எழுவாயாகக் கொண்டு, "தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு" என்கிறபடி மதி உன்னையே காட்டிக் கொடுக்கிறபடியால் ஞானத்தின் பயனான உன்னை யன்றி யாரை 'ஞானம்' என்று சொல்லலாம் என்றும் பொருள் கொள்ளலாம். 'மதி' என்பதற்கு 'சந்திரன்' என்றும் பலர் பொருள் கொண்டிருக்கின்றனர். 'மநோமய': என்பதற்கு மனத்தால் அறியக்கூடியவன் என்பதுபோல 'மதி' என்பதற்கு ஞானத்தால் உணரப்படுகிறவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

வெளியும் நீயே வெளியுற நிற்றலின் - மதி அல்லது 'ஞானம்' என்னும் சொல்லால் உணர்த்தப்படும் ஆத்மா நீ என்றார்; இங்கு அதற்குப் புறம்பான ஸகல வஸ்துக்களும் நீயே என்கிறார். வெளியுற - (ஆகாயத்

தோடு) ஸ்பர்சம் ஏற்படும்படியாக அல்லது கண் முதலிய இந்திரியங்கள் உற (உணரும்படியாக) புறம்புள்ள எல்லா வஸ்துக்களுமாய் நிற்பதாலே, வெளியும் நீயே - அந்த வெளியும் நீதான். "நிற்கின்ற தெல்லாம் நெடுமால்' என்ற நினைவு இங்கு.

'வெளி' என்பதற்கு 'வெளிச்சம்' என்று பொருள்கொண்டு ஒளியுடைய ஸூர்யன் சந்திரன் அக்னி இவை உன்னுலேயே ஒளி பெற்று விளங்கு கின்றன என்றும் பொருள் கூறியிருக்கிருர்கள்.

தாயும் நீயே சாயை தந்து உகத்தலின் - ஸர்வேச் வரனைத் தாயாக வர்ணிப்பதை யொட்டி இங்கே தாயும் நீயே என்று கூறி அதற்குக் காரணத்தையும் காட்டுகிருர். 'சாயா' என்னும் வடமொழிச்சொல் நிழல், பிரதிபிம்பம், ஸாம்யம், அழகு, ரக்ஷணம், என்று பல் பொருள் கொண்டது. அவை யெல்லாம் இங்கே கொள்ளலாம். குழந்தையைப் பெற்றுக் கண் நிழலிலே வைத்துக் காத்து அதனுல் சந்தோஷ மடைவது தாயின் இயல்பு. அதுபோல் எம்பெரு மானும் தன்னடி நிழலே யளித்துக்காத்து அதனுல் தன்னைப் பேறு பெற்றவனுக எண்ணி உகக்கிருன்.

தந்தையும் நீயே முந்தி நின்றளித்தலின் - அன்புக்கு உரிய குணங்களால் தாயாவது போல ரக்ஷணத்திற்கு உறுப்பான அம்சங்களாலே நீ தந்தையும் ஆகிருய்.

முந்தி நின்று - எனக்கு நன்மையானவற்றை யான்

அறிந்து உன்னை வேண்டாமலிருப்பினும் நீயே எனக்கு நலத்தை யறிந்து முன்வந்து கொடுத்தருள் கிருய். என் அறிவின்மையால் நான் தீமையைத் தீமையென்று அறியாது நிற்க, அது வருவதற்கு முன்பே முன் நின்று அதை விலக்கி என்னைக் காப்பாற்றுகிருய், அதனுல் நீ தந்தையும் ஆகிருய். உலகத்தில் தாய்வேறு, தந்தை வேருயிருப்பது போலன்றி, எம்பெருமான் தாயும் தந்தையுமாகிருன். "தாயிருக்கும் வண்ணமே உம்மைத் தன் வயிற்றிருத்தி உய்யக் கொண்டான்" என்றும், "தான் எனக்காய் நினைந்து அருள்செய்யும் அப்பன்" என்றும் திருமங்கையாழ்வாருடைய அருளிச் செயல்.

உறவும் நீயே துறவாதொழுகலின் - தாய் தந்தை என்பதுமட்டுமன்று, எல்லாவித பந்துவும் நீயே என்கிருர். ஒருகாலும் என்னைத் துறவாதிருத்தலால் நீதான் உறவு. ஏனையோர் உறவெல்லாம் ஒரு காரணத்தையிட்டு நிற்கும். அவர்கள் கைவிட்டுச் சென்ருலும் செல்வர். நீ ஒருவனே கைவிடாதவன். "உன்தன்னோடு உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது". இவ்விடத்தில் 'ஒழிதலின்' என்ற பதம் இவ்வாக்கியத்திற்கு அநுகுணமாயில்லை யென்றதால் 'ஒழுகலின்' என்ற பாடம் கொள்ளப்பட்டது.

உற்றதும் நீயே சிற்றின்பமின்மையின் - உற்றது - ஏற்றது. அதாவது என் ஸ்வரூபத்திற்கு அநுகுண

மான புருஷார்த்தமும் நீயே. ஏனெனில் நீ சிற்றின்ப மில்லை. அல்பமாய் நிலையற்ற ஸுகங்கள் போலில்லாததால், நீதான் எனக்கேற்ற புருஷார்த்தம்.

ஆறும் நீயே ஆற்றுக்கு அருள்தலின் - ஆறு என்றால் வழி. பேரின்பமாகிய புருஷார்த்தத்திற்கு உபாயமாய் நிற்பவனும் நீயே. உபாயம் பக்தி - ப்ரபத்திகளன்றோ எனில் அதற்கு விடையாக 'ஆற்றுக்கு அருள்தலின்' என்கிறார். அதாவது பக்தி முதலானவைகளை ஒருவன் அனுஷ்டித்தாலும் அதனால் ப்ரஸன்னனான ஸர்வேச்வரனே தன் அநுக்ரஹ ஸங்கல்பத்தால் அவற்றுக்குப் பலன் கொடுக்கிறானே யொழிய அவை தாமே பலத்தைக் கொடுக்க சக்தி யற்றவை. அதனால் பகவானை ஸித்தோபாயம் என்றும் பக்திப்ரபத்திகளை ஸாத்யோபாயம் என்றும் கூறுவர்.

அறமும் நீயே மறநிலை மாய்த்தலின் - அறம் - தர்மம்; அதற்கு மாறான நிலை மறம். அதாவது அதர்மம். அதை ஒழிப்பதால் தர்மஸ்வரூபமா யிருப்பவனும் நீயே. அநாதியான கர்மவாஸனையாலே எங்களுக்குப் பாபத்தில் உள்ள ருசியை விலக்குகிறாயன்றோ? இதற்கு மேல் அறமுண்டோ? மறநிலை மாய்ந்த போதன்றிப் புருஷார்த்தத்தில் ருசி பிறவாது; உபாயத்தில் பிரவிருத்தியும் ஏற்படாது, ஆகவே உற்ற புருஷார்த்தம், அதைப் பெறுவிக்கும் ஆறு (உபாயம்), அதில் மூட்டுவிக்கும் அறம், இவை

யனைத்தும் நீயே என்கிறார். இங்கு 'ராமோ விக்ரஹ வாந் தர்ம:' 'க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்' என்பவற்றை ஸ்மரிப்பது.

துணைவனும் நீயே இணையிலையாதலின் - எக்காரியத்திலும் உன்னைத் தவிர வேறு எனக்கு துணைவன் இல்லை. உனக்கு ஸமானம் வேறொருவரும் இல்லை யாதலால் வேறு எவனைத் துணையாகக் கூறமுடியும்.

உற்ற துணைவன் நீயே. நீ துணைவனா யிருக்கும் போது வேறு எவராலும் எனக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லை. நீ துணைவனா யிருக்கையில் என்னைத் தடுப்பார் யாருமில்லை. நீ துணை செய்யாதபோது என்னால் ஆகக்கூடியது ஒன்றுமில்லை.

துய்யனும் நீயே செய்யாள் உறைதலின் - செய்யாள் - சிவந்த நிறமுடையவள், அதாவது பெரியபிராட்டியார். அவள் உன்னிடம் நித்யவாஸம் செய்வதால் நீயே பரிசுத்தன். 'ஸ்ரிய:பதியாய் நிகிலஹேயப்ரத்யனீகனாய்' என்று பூர்வர்கள் அருளிச் செயலால் ஸ்ரிய: பதியாய் அதாவது லக்ஷ்மிக்குப் பதியாயிருப்பதாலே ஹேயப்ரத்யநீகன் (ஸகல தோஷங்களுக்கும் எதிர்த்தட்டா யிருக்கிறான்) என்று கிடைக்கிறது. பிராட்டிக்கு அஸாதாரண குணங்களான தயை, அநுக்ரஹம் முதலியன ஈசுவர குணத்தில் சேராமலிருக்குமே யாயின் அந்த ஈசுவர குணங்கள் தோஷங்களாகவே

ஆகக்கூடுமாதலின் இங்கு செய்யாள் உறைதலின் துய்யன் என்று பேசுகிறார்.

"தத் கல்யாணம் கிமபி யமிநாம் ஏகலக்ஷ்யம் ஸமாதௌபூர்ணம்தேஜ: ஸ்புரதி பவதீ பாதலாக்ஷா ரஸாங்கம்" என்ற ஸ்ரீஸ்துதிச்லோகத்திலும் இதே பொருள் த்வனிக்கிறது. பிராட்டியின் ஸம்பந்தம் பெற்றதால் அவனுக்கு மங்களத்வம் உண்டாகிறது. "ஸீதேவாநுகதா லக்ஷ்மீ: தஸ்ய கிந்நாம துர்லபம்" என்ற ஸௌமித்திரையின் வாக்கியத்தாலும் "அப்ரமேயம் ஹி தத்தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்ற மாரீசன் வாக்கியத்தாலும் வால்மீகி பகவான் விவரிக்கும் அர்த்தங்களும் இங்கே கொள்ளத்தக்கன.

காரணம் நீயே நாரணன் ஆதலின் - நாராயண சப்தத்தால் குறிக்கப்படுபவன் நீயே யாகையால் ஸகல ஜகத்துக்கும் காரணம் நீதான். "நானுன்னை யன்றி யிலேன் கண்டாய் நாரணனே நீ என்னையன்றி யிலை" என்ற திருமழிசைப் பிரான் வாக்கின்படி ஸமஸ்தவஸ்துக்களுக்கும் இவன் இருப்பிடம், இவனுக்கு ஸமஸ்தவஸ்துக்களும் இருப்பிடம். இரண்டு வகையாலும் நீயே நாராயணன். உபாதானம் நிமித்தம் என்ற இருவகைக் காரணமும் இவனே என்ற ஸூக்ஷ்மார்த்தங்களெல்லாம் 'காரணம் நீயே' என்பதால் காட்டப்படுகின்றன.

கற்பகம்நீயே நற்பதம் தருதலின் - எல்லாவற்றுக்கும் மூலகாரணமா யிருப்பது மட்டுமன்றி எல்லா வற்றையும் கொடுக்கவல்ல கற்பகவ்ருக்ஷமும் நீயே. கேட்டதை யெல்லாம் கொடுப்பது நமக்கு ஹிதமாக ஆகாது. நன்மை தீமைகளை அறியாது கற்பகவ்ருக்ஷம் நாம் கேட்பதை யெல்லாம் கொடுக்கும். எம்பெரு மானோவெனில் வேண்டிக் கேட்கிலும் தீமையைத் தன்னடியார்களுக்குக் கொடான். "யாசிதோபி ஸதா பக்தை: நாஹிதம் காரயேத் ஹரி:" நமக்கு எது ஹிதமோ அதையே கொடுப்பது எம்பெருமானுன இந்தக் கற்பகத்தின் ஏற்றம்.

நற்பதமாவது அடையப்படும் சிறந்த பதம். இங்கே எம்பெருமானே அங்ஙனமாதலின் நற்பதம் எனப்படுகிறன். "எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்ற ஆழ்வார் அருளிச் செயலின்படி தன்னையே நமக்கு நற்பதமாக நல்குமவன். அவனை அனுபவித்த லாகிறமோக்ஷாநந்தத்தைத் தரவல்லமை வேறெவருக் கும் கிடையாது; சாதாரண கற்பகத்திற்கும் கிடை யாது. அதையும் அடைவிக்குமவனுன நீதான் உண்மையில் கற்பகம்.

இறைவனும் நீயே குறையொன்றிலாமையின் - ஒரு குறையுமில்லாமல் பரிபூரணனுன நீதான் எங்களுக்கு மஹாராஜன். அரசனென்பவன் குறைகளும் குற்றங் களும் இல்லாதிருக்கவேண்டும். அவைகள் ஒன்றும்

உன்னிடத்தில் கிடையாதபடியால் நீயே எங்களுக்கு இறைவன்.

"குறையொன்றுமில்லாத கோவிந்தா...இறைவா" என்ற திருப்பாவையின் இருபத்தெட்டாவது பாசுரத்தின் பொருள் இங்கே கிடைக்கிறது. 'குறை யொன்றுமில்லாதபடியால் அவன் இறைவன்' என்று இசைத்துப் பொருள்படுத்துகிறார்.

இன்பமும் நீயே துன்பம் துடைத்தலின் - இங்கு 'இன்பமுடையவன்' என்ற பொருளைத் தரும் 'இன்பன்' என்ற சொல்லை ப்ரயோகிக்காது 'இன்ப சொரூபன்' என்ற பொருளில் 'இன்பம்' என்றே கூறியதால், ஸம்ஸாரமாகிற பெருந் துயரைப் போக்கித் தன்னை அனுபவித்தலாகிய பேரின்பத்தை நாம் பெறும்படி செய்கிறான் என்றதாயிற்று. அவனே இன்பமா யிருந்தாலன்றி, இன்பமுடையனாகவிருப் பதால் மாத்திரம் நம் துன்பத்தை ஒழிக்க வல்லனாகான். அவனே இன்பமயமாயிருப்பது பற்றி நம் துன்பங்களை யெல்லாம் தொலைக்கிறான் என்றபடி.

யானும் நீயே என்னுளுறைதலின்—

கீழ் பதினன்கு அடிகளில் மதி, வெளி, தாய், தந்தை, உறவு, உற்றது, ஆறு, அறம், துணைவன், துய்யன், காரணம், கற்பகம், இறைவன், இன்பம், என்ற அம்சங்களை யெடுத்துத் தம்மளவில் அந்த அந்த அம்சங்களாய் நின்று விளங்குகின்றான் என்று

அருளிச் செய்து வந்த இவ்வாசிரியர் இனி மற்றும் பல அம்சங்களையும் கூறி விரித்துக் கொண்டிருக்க வேண்டாமென்று இவ்வடியிலும் அடுத்த அடியிலும் தாமும் தம்முடையவான அனைத்துமே அவ்வெம் பெருமான் தான் என்று முடிக்க முற்படுகிறார்.

'நான்' என் றுசொல்லப்படும் ஆத்மாவாகிய என்னுள் வியாபித்து நிற்பதால் 'நீவேறு நான் வேறு' என்ற பேச்சுக்கே இடமில்லை. உனது திவ்யாத்ம ஸ்வரூபத்தால் என்னுடைய உள்ளும் புறமும் வியாபித்து நிற்கின்றாய்; அங்குஷ்டமாத்திர பரிமாண முள்ளவனாய் என்னுடைய ஹ்ருதயமாகிய குகை யில் உன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்துடன் உறைகின்றாய்; பனிக்கடலுள் பள்ளிகோளைப் பழக விட்டு என் மனக்கடலுள் வாழ்கின்றாய்; அரவத்து அமளியினோடும் அழகிய பாற்கடலோடும் அர விந்தப் பாவையும் நீயுமாய் என் அகம்படி வந்து புகுந்து நிற்கின்றாய்; வந்த நாள் வந்து என் நெஞ் சிடங் கொண்ட நீ மற்றோர் நெஞ்சறியாது என் னிடமே ஸ்திரமாக எழுந்தருளியிருக்கின்றாய்; நான் உனக்குச் சரீரமாய் நீ எனக்கு ஆத்மாவாய் நின்று நாமிருவரும் பிரித்துப் பார்க்க வியலாத நிலையில் நிற்பது பற்றி யானும் நீயேயாகின்றாய் — என்ற வாறு.

செய்யாளாகிய பிராட்டி கணமும் அவனை

விட்டுப் பிரியாது அவனிடம் உறைவதாகக் கீழே அருளிச் செய்தார் ஆசிரியர். இங்கு அவ்வெம் பெருமான் தம்முள் உறைவதாகக் கூறியருளினர்; ஆகவே இரண்டிடத்திலும் உறைதலின் என்ற சொல் பிரயோகித்தமை பற்றிப் பிராட்டியும் எம் பெருமானும் தம்முள் உறையும் சேர்த்தியை ஸ்வாமி தேசிகன் கண்டுமகிழ்ந்த சுவை காண்க.

எனதும் நீயே உனதின்றியின்மையின்

முந்திய அடியில் யான் என்று வரும் அஹங்காரத்தை மாற்றினராயிற்று, இவ்வடியில் 'எனது' என்று வரும் மமகாரத்தை மாற்றுகிருர். ஸகல வஸ்துக்களும் உன்னுடையவை உனக்குச் சேஷமானவை; அவற்றுள் சிலவற்றை என்னுடைய அறியாமையால் என்னுடையனவாகக் கூறிக்கொள்கின்றேன்; என்வீடு, என்தோட்டம் என்றெல்லாம் பிதற்றும்படி மமகாரம் மிகுத்து நிற்கின்றது. உனக்குச் சேஷபூதமில்லாத வஸ்துவே கிடையாது. ஆகவே எனது எனப்படும் அனைத்தும் உனக்குச் சேஷபூதமே. சேஷிஸம்பந்தத்தாலே எனது எனப்படும் யாவும் நீயே. என்றவாறு.

'யானும் நீ எனதும் நீ' என்ற அநுஸந்தாநம் ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் மிக மிகக் காணக் கிடக்கின்றது' 'கடல் ஞாலம் செய்தேனும் யானே

யென்னும்' என்கிற திருவாய் மொழியில் ஆழ்வார் தாமும்ஈசுவரனே யென்று அநுபவித்துப் பேசியருளி னுர். "யானே யென்னை யறிய கிலாதே யானே யென்றனதே யென்றிருந்தேன் யானேநீ என்னுடை மையும் நீயே" என்ற பாசுரத்தில் ஆழ்வார் முந்திய தசையையும் பிந்திய தசையையும் சேர்த்துப் பாசுர மிட்டார். இங்கு நம் ஆசார்யோத்தமர் 'யானும் நீயே' 'எனதும் நீயே' என்று நல்லுணர்வுக்குப் பின் வரும் அனுஸந்தானத்தை மட்டும் எடுத்து அருளிச் செய்தார். ஆளவந்தார் "ஸகலம் தத்ஹி தவைவ மாதவ" 'அனைத்தும் உன்னுடையன' என்றுர். ஸ்வாமி தேசிகன் 'அனைத்தும் நீயே' என்கிறுர் அனைத்தும் நீயே யாதலால்.

மேல்வரும் இரண்டு அடிகளில் எம்பெரு மானுடைய நன்மையையும் வன்மையையும் பேசி முடிக்கிறுர்:—

நல்லாய் நீயே பொல்லாங்கிலாமையின்

பொல்லாங்கு=தீங்கு, தீமை. இது இல்லாமை யின் நல்லவனெனப்படுபவன் நீயே.

கீழடிகளில் 'துறவா தொழுகல்' 'சிற்றின்ப மின்மை' 'மறநிலைமாய்த்தல்' 'குறையொன்றிலாமை' 'துன்பம் துடைத்தல்' என்ற அம்சங்களால் விலக்கு தற்குரிய தன்மைக்கு எதிராயிருக்கும் தன்மை

கூறப்பட்டதாகிறது. இங்குக் கூறப்பட்ட அம்சங்களையே ஒன்றுகூட்டி அதன் திரண்ட பொருளை இவ் வடியில் 'பொல்லாங்கிலாமையின்' என்ற தொடரால் வெளியிட்டருளினரென்றுகூடக் கூறலாம்.

வல்லாய் நீயே வையமுண்டுமிழ்தலின்

உலகங்களையெல்லாம் ப்ரளயகாலத்தில் உண்டு மீண்டும் ஸ்ருஷ்டி காலத்தில் உமிழ்வதால் வல்லமையென்னும் குணம் உன்னிடம் தங்கியிருக்கிறது. நீயே ஸர்வசக்தன். தெய்வங்கள் என்று பாராட்டப் படுவர்களெல்லாரும் 'எம்பெருமானுண்டுமிழ்ந்த எச்சில் தேவர்' என்று ஆழ்வார்களிடம் பெயர் வாங்கி விட்டனர். ஆக நீயொருவனே ஸர்வசக்தன் என்றவாறு.

நம்மாழ்வார் 'படைத் திடந்துண்டு மிழ்ந்தளந்து தேர்ந்துலகளிக்கும் முதற் பெருங்கடவுள்' என்று மகிழ்ந்து பாடிய அம்சம் இது. 'ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவதும் அகப்படக் கரந்து ஓராலிலைச் சேர்ந்த எம்பெருமாமாயனையல்லது ஒருமா தெய்வம் மற்றுடையமோ யாமே' என்று நம்மாழ்வார் திருவாசிரியத்தை முடித்தரீதியில் ஸ்ரீ தேசிகனும் அத்தகைய முறைபிலே இந்த ஆசிரியப்பாவிலும் அதே பெருமையைப் பேசி ஒருவாறாக முடிக்கிறார்.

எங்ஙனமாகு மெய்யனின் வியப்பே அங்ஙனே யோக்க அறிவதாரணமே.

'மெய்ய' என்பது இங்குவிளி. தொடக்கத்திலே இடப்பட்ட 'அடியவர்க்கு மெய்யன்' என்ற திரு நாமம் இப்பாசுரத்தில் பேசப்பட்ட பற்பல குண விசேஷங்களால் பொருத்தம் பெற்று மெய்யானது பற்றி இப்பாசுரத்தின் இறுதியில் 'மெய்ய' என்று ஒருமுறை அழைத்துக் கொண்டார் போலும்.

ஆரணம் என்பது வேதம். கர்மபாகம் ஜ்ஞாந பாகம் எனப் பாகுபாடு பெற்ற வேதத்தில் ஜ்ஞாந பாகமாய் விளங்கும் உபனிடதங்கள்தாம் ஆச்சர்ய மான உன் இயல்புகளை உள்ளபடி ஒருவாறு அறியும் வல்லமை பெற்றன.

வியப்பு என்றதால் ஒன்றுக் கொன்று மாறுபட்டு உலகில் ஓரிடத்தில் சேர்ந்து நிற்கப்பெறாத தன்மைகளெல்லாம் உன்னிடம் கூடி நிற்கும் ஆச்சரியத்தை அடியேன் என்னென்பேன் என்ற தாயிற்று. உதாஹரணமாய் உள்ளும் புறமும் ஒத்து வியாபித்திருத்தல், தாயும் தந்தையுமா யிருத்தல், தன்னை அநுபவிக்கக் கொடுப்பவனுகவும் கொடுக்கப் படும் பொருளாகவும் நிற்றல், யானுகவும் எனதாகவும் நிற்றல், ஆகிய மாறுபட்ட தன்மைகளெல்லாம் உன்னிடம் ஒன்றுகூடி நிற்கப்பெற்ருயே! இதென்ன ஆச்சரியம்! என்கிருர். நம்மாழ்வாரும் இத்தகைய மாறுபட்ட தன்மைகளை எம்பெருமானிடம் கண்டு 'நல்குரவும் செல்வும்' என்ற (6-3) திருவாய்மொழி

யில் அநுபவித்துப் பேசியருளினர். கீழ்க்கூறிய விருத்த (மாறுபட்ட) தத்துவங்களை மற்ற ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களால் அறியமுடியாதாதலின் இவ்விஷயத்தில் வேதமே ப்ரமாணம் என்றதாயிற்று.

இங்கு 'ஆரணமே' என்ற சொல்லின் ஏகாரத்தை வினப்பொருளில் கொண்டு 'ஆரணம் அறிவதே' என்ருக்கி உன் தன்மைகளை உபநிடதமும் அறியவல்லதோ என்றும் பொருள் கொள்வது சிறக்கும். எம்பெருமான் தனக்கும் தன் தன்மை அறியவரிதாய் நிற்க (தனக்கும் தன் தன்மை யறிவரியானை) அவன் தன்மையை வேதம் மட்டும் அறிந்து விடுமோ? எம்பெருமானுடைய குணங்களை யறிய மனத்தையும் துணைகொண்டு பயணம் புறப் பட்டுப் பெருமுயற்சி செய்தும் அவனுடைய ஆநந்த குணத்தின் ஏகதேசத்தையும் காணவியலாது கையற் றுத்திரும்பி வந்ததாய் உபநிடதம் தானே முறையிட வில்லையா? யதோ (வாசோ நிவர்த்தந்தே)

இங்ஙனம் ஏகாரத்தை வினப்பொருளிற் கொள் வதில் உள்ள தகுதியைச் சில குறிப்புக்களும் வலி யுறுத்தும். 'வியப்பு' என்பதால் ஆச்சர்யமென்று காட்டி, பின் அதை அறியமுடியுமென்று சொல் வதைக்காட்டிலும் அறிய முடியாதென்று சொல்வது சிறக்குமன்றே; ஒருமிக்க அறிவது என்றும் பொருள் தரும் 'ஒக்க அறிவது' என்னும் தொடர் உன்

அற்புதத் தன்மைகளை யெல்லாம் ஒருமிக்க அறிவது இயலாததா மென்று கூறுவதிலே மிக்க நோக்குடைய தென்னலாம். மேலும் அடுத்த பாசுரம் 'ஆரணங்கள் தேட' என்று தொடங்குவதால் வேதபாகங்களனைத்தும் ஒன்றுகூடியும் அவனைத் தேடிக் கொண்டே இன்னும் அவனைக் கண்டபாடில்லை யென்றதாயிற்று. ஆதலின் ஏகாரத்தை வினைப் பொருளிற் கொள்வதும் தகும்.

ஆழ்வார்களும் பல்விடங்களில் எம்பெருமானை நோக்கி அனைத்தும் நீயே என்று பாடியுள்ளார்கள். ஆனால் இப்பாசுரத்தில் 18 அடிகளில் 'நீயே' 'நீயே' என்று ஸ்ரீ தேசிகன் பாடியது போல் எங்கும் காண முடியாது. உயர்ந்த தத்துவார்த்தங்களும் அழகிய காவ்யரசனையும் ஒருங்கே இப்பாசுரத்தில் நாம் கண்டு களிக்கக் கிடக்கின்றன என்னுதல் மிகையாகாது.

ஆரணங்கள் தேட அயிந்தைநகர் வந்துதித்த
காரணராய் நின்ற கடல் வண்ணர்—நாரணனார்
இப்படிக்கு மிக்கு அன்றெடுத்த பாதங்கழுவ
மெய்ப்படிக்க மானது பொன் வெற்பு (9)

ஆரணங்கள்தேட - வேதங்கள் (எம்பெருமானைக் காணாமல்) தேடிக்கொண்டிருக்க

அயிந்தை நகர் வந்துதித்த - திருவகீந்திரபுரத்தில் வந்து அவதரித்த

காரணராய் நின்ற - (ஸகலஜகத்) காரண வஸ்துவாய் நிற்கின்ற

கடல் வண்ணர் - ஸமுத்ரம் போன்ற வர்ண முடையவரான

நாரணனுர் - நாராயணனெனப்படும் எம்பெருமான்

இப்படிக்கு - இந்த பூமிக்கு

மிக்கு - மேற்பட்டு

அன்று எடுத்த - அன்று (த்ரிவிக்ரமாவதாரத்தில்) தூக்கிய

பாதம் - திருவடியை

கழுவ - அலம்ப (அதாவது ப்ரஹ்மா திருமஞ்சனம் செய்ய) (அந்த நீரை ஏற்பதற்கு)

பொன்வெற்பு - மேருபர்வதம்

மெய்ப்படிக்கம் ஆனது - உண்மையான ப்ரதிக்ரஹ பாத்திரமாயிற்று.

இப்பாசுரத்தின் உள்ளுறை பொருள் அறிய வரிதாயுளது. இன்று நம் கண் முன் காட்சிதரும் இத்தெய்வநாயகனே பரரூபத்தை யுடையனுகவும் அன்று உலகளந்த த்ரிவிக்ரமனுய் ஸேவை ஸாதித்த வனுகவும் கூறுவதால் அர்ச்சாவதாரத்திற்கும் பரம்

விபவம் முதலிய ரூபங்களுக்கும் உள்ள ஒற்றுமையும் தொடர்பும் கூறப்பட்டதாகின்றது.

ஆரணங்கள்தேட அயிந்தை நகர் வந்துதித்த

நான்மறைகள் தேடி என்றும் காணமாட்டாச் செல்வனுன எம்பெருமான் இங்கு அயிந்தையில் வந்து எல்லோரும் கண்டு களிக்குமாறு நிற்கின்றுன். வேதங்கள் ஒருமுகமாய்த் தன்னைத் தேடிக் கொண்டே நிற்க, அவற்றுக்கு அகப்படாது அவற்றை ஏமாற்றிவிட்டு, நம்மை வாழ்விக்கத் திருவுளங் கொண்டு தன்னுடைய எல்லையற்ற ஸௌலப்யத்தால் இவ்வயிந்தையில் ஸகல சேதநரும் ஸேவித்து இன்புறலாவதொரு வடிவு கொண்டு விளங்கும் அற்புதம் பாசுரத்தின் முதலடியால் வெளியாகின்றது. வேதத்தின் கைக்கு எட்டாத பரமபுருஷன் நம் கையில் எளிதாக வந்து தோன்றி அகப்பட்டானே! என்ன ஆச்சர்யம்!!!

காரணராய் நின்ற கடல்வண்ணர் நாரணனுர்

இந்தக் கடல் வண்ணனே உலகமனைத்துக்கும் காரணமான வஸ்து. இவனே நாராயண சப்தத்தால் சொல்லப்படுபவன்; நார - அயந சப்தங்கள் சேர்ந்து 'நாராயண' என்று ஆகும்போது அயநசப்தத்தில் உள்ள நகரம் ணகரமாகி அதனுல் காட்டப்படும் ஒரு குறிப்பிட்ட வ்யக்தியும் இவனே.

இப்படிக்கு மிக்கு

படி - பூமி. இந்த பூமியையும் தாண்டித் திருவடி தூக்கப்பட்டதென்று கருத்து.

படி - ப்ரகாரம்; ஒருவராலும் இத்தகைய தென்று அளவுபடுத்திப் பேசவியலாது. அந்த நிலைமையை மீறிச் செய்தது . இந்த த்ரிவிக்ரமா வதாரம் என்றும் கொள்ளலாம்.

மேலும் - உன் பெருமைகளை ஒருவாறு கூற முற்பட்டுக் கீழ்ப்பாசுரங்களில் சிலவற்றைக் கூறி இப்பாசுரத்தில் 'ஆரணங்கள் தேட' என்று தொடங்கினேன். ஆனால் நீ த்ரிவிக்ரமாவதாரத்திற் செய்த செய்கைகளை நினைந்து அனுபவிக்கும்போது கீழ் நான் கூறிய பெருமைகளெல்லாம் ஏகதேச மென்னும்படி யிருக்குமென்ற கருத்தில் நோக்க முடையதாகவும் 'இப்படிக்கு மிக்கு' என்ற தொடரைக் கொள்ளலாம்.

அன்றேடுத்த பாதம்

உலகனைத்தையும் ஒரு திருவடியா லளந்து ஆகாசமெல்லாம் அளக்கத் தூக்கப்பட்ட திருவடி.

ஆங்குமாவலி வேள்வியிலிரந்து சென்று அகலிட முழுதினையும் அளந்த பாதம்.

கழுவ - திருமஞ்சனம் செய்ய. இங்குத் திரு

மஞ்சனம் செய்தவர் யார் என்று கூறப்படவில்லை. ப்ரஹ்மா தாம் செய்தார் என்பது மிகப் பிரசித்தம்.

"குறைகொண்டு நான்முகன்
குண்டிகை நீர்பெய்து
மறைகொண்ட மந்திரத்தால்
வாழ்த்திக்—கறைகொண்ட
கண்டத்தான் சென்னிமே
லேறக் கழுவினான்
அண்டத்தான் சேவ
டியை யாங்கு"

என்று நான்முகன் திருவந்தாதிப் பாசுரம் திருவுள்ளத்தில் தோன்றி யிருக்கும்.

ஸ்ரீ தேவநாதன் தன் திருவடிகளின் ப்ரபாவத்தால் நதிகளில் சிறந்ததும் புண்யமுமான கங்கையை உலகுக்களித்தது போல் மலைகளிற் சிறந்த மஹாமேருவை ஸுவர்ணமலையாக்கித் தந்த பெருமையையும் வெளியிடுகிறார்.

மேய்ப்படிக்கமானது போன்வேற்பு

பொன்வெற்பு - மேருமலை. ப்ரஹ்மா திருமஞ்சனம் செய்த திருவடித் தீர்த்தத்தை ஏந்திய படியால் இம்மலை பொன்னுமாய் ப்ரதிக்ரஹ பாத்ரமுமாயிற்று யென்று ஸூசிதம்.

ஆராதிக்கப்படும், வஸ்து எம்பெருமானுடைய பொன்னூர்கனைகழற்கால்; ஆராதிப்பவன் ப்ரஹ்மா; திருமஞ்சனம் செய்வது குண்டிகை நீராலே; ஏந்துகிற பாத்ரம் மஹாமேருபர்வதம். எம்பெருமானுடைய திருவடியில் ப்ரம்மா செய்த திருமஞ்சனத் தீர்த்தத்தைத் தான் ஏந்திய பெருமை பெற்றபடியாலேதான் மேருபர்வதம் பொன்மலையானதோடு மஹாமேருவுமாயிற்றுப் போலும். விண்ணுலகில் செய்யப்பெற்ற திருமஞ்சனத் தீர்த்தம் பூமியில் விழும் போது முதலில் உயரமான மேருமலையின் மீதே விழுவதால் மேருமலை படிக்கமாக வர்ணிக்கப்பட்டது.

'மூவராகிய ஒருவனை மூலவுலகுண்டுமிழ்ந்தளந் தானை' என்று ஸ்ரீ தேவநாதனைத் திருமங்கை மன்னன் மங்களாசாஸநம் செய்தார். அதைத் தழுவி ஸ்ரீ தேசிகன் முந்திய பாசுரத்தில் 'வையமுண்டு மிழ்தலின்' என்றதால் உண்டுமிழ்ந்ததையும், இப் பாசுரத்தில் மூன்றுமடியில் அளந்ததையும் பேசினார்.

மஹாமேரு படிக்கமானதாகக் கூறுவது உத்ப்ரேக்ஷை மாத்திரமா, புராணங்களில் எங்காவது இவ்வரலாறு எடுக்கப்பட்டுளதா வென்பது ஆராய வேண்டிய விஷயம்.

8.

வெற்புடனென்றி அயிந்தையில்
வெவ்வினை தீர் மருந்தொன்று

அற்புதமாக அமர்ந்தமை கேட்டு
அருள் வேண்டி நிற்கப்
பற்பிலமர்ந்த செய்யாள்
படி காட்டிய பண்புடை எம்
விற்புருவக் கொடிக்கு ஓர் விலங்கா
மயல் பெற்றனமே (9)

அயிந்தையில்—திருவயிந்திரபுரத்தில்
வெற்புடன்—மலையோடு
ஒன்றி—சேர்ந்து (ஸம்பந்தம் பெற்று)
வெவ்வினை தீர்—கொடிய பாவங்களைப் போக்க வல்ல
ஒன்று மருந்து—ஒப்பற்ற (ஒரு) மருந்து
அற்புதமாக—அதிக ஆச்சர்ய சக்திகளோடு கூடியதாக
அமர்ந்தமை—இருந்ததை
கேட்டு—(பிறர் சொல்லக்)கேட்டு
அருள் வேண்டி நிற்க—(அந்த மருந்தின்) அருளைப் பிரார்த்தித்து நிற்குங் கால்
பற்பில்—தாமரையில் (பத்மத்தில்) அல்லது - தாமரையாகிய இல்லத்தில் (வீட்டில்)
அமர்ந்த—வீற்றிருந்த
செய்யாள்—பெரிய பிராட்டி யுடைய

படி—தன்மைகளை
காட்டிய—(நாம் காணும்படி) காட்டிக்கொடுத்த
பண்புடை—தன்மை வாய்ந்தவளான
எம் வில் புருவக் கொடிக்கு } வில்லைப் போன்ற புருவத்தை யுடைய கொடியை யொத்த எங்கள் பெண்ணுக்கு
ஓர்—அதிவிலக்ஷணமான
விலங்காமயல்—தீராத மயக்கத்தை (ஆசையை)
பெற்றனம்—அடைந்தனம்.

ஆழ்வார் 'வாராயின முலையாளிவள் வானோர் தலைமகனும் சீராயின தெய்வ நன்னோயிது' என்றார் திருவிருத்தத்தில். வானோர் தலை மகன் தேவநாதன். அவன்பால் ஸ்ரீ தேசிகனுக்கு ஏற்பட்ட மிக்க பக்தியை ஒரு காதல் நோயாக வர்ணித்துக் காட்டு கின்றது இப் பாசுரம். கீழ் 3, 6, ம் பாசுரங்களின் குறிப்புக்களில் அவற்றை முறையே பரபக்தி பரஜ்ஞாநதசைகளென்றும் இந்த 9 ம் பாட்டு பரம பக்தி தசையென்றும் சொன்னோம். "இப்படி நிரதிசய போக்கியமான பகவத்ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்த வாறே பெருவிடாய்ப் பட்டவன் தடாகத்தைக் கண்டாற்போலே பிறந்த ப்ரீத்யதிசயம் பரம பக்தி" என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. "ஆர்க்குங் கருணை" யில் எம்பெருமான் தன்னைக் காட்டிக் கொடுக்க

அப்போது ஓர் அநுபவம் பிறந்தது. 'அவ்வநுபவம் "பயின் மதி"யிலும் "ஆரணங்கள் தேட"விலும் தொடர்ந்து வந்து 'எல்லாம் அவனே' யென்றும், 'எல்லாம் அவனதே' என்றும் ஸாக்ஷாத்காரம் பிறந்தது. அதன் பலனாகப் பெருவிடாய் ஏற்பட்டு அந்தப் பிரீதி தலைக்கேறி நின்ற நிலையை இப் பாசுரத்திற் காண்கிறோம். இதை உணர்த்தப் பெண் பேச்சு வேண்டி யிருந்தபடியால் இப் பாசுரம் நாயிகாபாவத்தில் அமைந்தது.

நோய் வாய்ப்பட்ட ஒருவன் அந்நோயைத் தீர்க்க வல்ல ஒரு மருந்து ஓரிடத்திலிருப்பதைக் கேள்வியுற்றான். உடனே அங்குச் சென்று அம்மருந்தைப் பெற்று உபயோகித்தான், நோய் தீருவதற்கு மாறாகத் தீராநோயாக விளைந்தது. இப்படியும் உண்டோ என்று வியக்கும் நிலையில் இப்பாசுரத்தின் போக்கு அமைந்திருக்கிறது.

பேஷஜம் (மருந்து) பிஷக் (வைத்தியன்) என்று ஸஹஸ்ரநாமத்தில் இரண்டு திருநாமங்கள். ஆழ்வார்களும் 'செடியார் வினைகள் தீர்மருந்தே' என்றும் 'மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணா' என்றும் பெருமாளை மருந்தாயும் மருத்துவனாயும் அநுபவிக்கின்றனர். மருந்தும் பொருளும் அமுதமும் தானே யாகிறவனன்றோ.

மலைகளில் விளையும் மருந்துக்கு வீர்யம் அதிகம்.

மாமலையிலுள்ள மருந்தே பிணி தீர்க்குமன்றே? இங்கு தேவநாதனாகிய உயர் மருந்து ஔஷதாத்ரி யென்னும் மலையிலமர்ந்துளது. அந்த மலையின் ஒரு பகுதியிலேயே எம்பெருமான் திருக் கோயில் அமைந் திருப்பதை இன்றும் காணலாம். ஆகவே மலையாகிய இடத்தால் வந்த சிறப்பும் கூறியதாயிற்று. மலையும் ஔஷதமலை; அம்மலையிலுள்ள இவனும் ஓர் பரமௌ ஷதம் (மருந்து). இடமும் ஔஷதம்; அதில் உள்ள பொருளும் ஔஷதம். இதை நினைந்தே 'வெற்புடனொன்றி...... மருந்து' என்றார் போலும். ஒன்றுதல்— ஒன்றுபட்டிருத்தல், ஒத்திருத்தல்.

வெவ்வினை தீர் மருந்து-

உலகிலுள்ள மற்ற மருந்துகள் உடலைப்பற்றிய நோய்களையே தீர்க்கும். இந்த மருந்தோ அத்தகைய நோய்களை மாத்திர மன்றி ஆத்மாவைப் பற்றிய கொடிய வினையாகிய நோய்களையும் தீர்க்கவல்லதாய் மிக உயர்ந்ததாய்த் திகழ்கின்றது.

ஒன்று மருந்து

ஒப்பற்ற மருந்து. அன்றி சகலநோய்களையும் தீர்க்கவல்ல ஒரே மருந்து. இந்த தெய்வநாயக னெனும் ஒரு மருந்தே எல்லா வினைகளையும் ஒழிக்க வல்லதென்ற தாயிற்று. 'மாம் ஏகம்' என்று தானே சொல்லிக் கொண்ட ஒரே மருந்து.

அற்புதமாக

உலகில் வெவ்வேறு மருந்து வெவ்வேறு நோய் களைப் போக்கும். அதற்கு மாருக இங்கு தெய்வநாயக னெனும் மருந்து ஒன்றே எல்லா வினைகளையும் போக்க வல்ல தாயிருப்பது மித அற்புதமன்ருே! மேலும் அயிந்தையில் அற்புதமாக அமர்ந்தமை என்று அந்வயம்கொண்டு, இத்தகைய உயர்ந்த ஔஷதம் அயிந்தையில் நம் அனைவருக்கும் எளிதில் கிடைக்குமாறு அமைந்திருப்பது அற்புதம் என்றும் கொள்ளலாம்.

கேட்டு

ஔஷத ஸேவை செய்து அநுகூல மடைந் தோரும் அவர்கள் அனுகூல மடைந்ததைப் பார்த் தோரும் சொல்லக்கேட்டு, 'கூரார் வேற் கண்ணீரு மக்கறியக் கூறுகேனே' என்ற கட்டுவிச்சி போன்ற அதிகாரிகள் சொல்லக்கேட்டு.

அருள்வேண்டி நிற்க

அம்மருந்தை அணுகி, அதை ஸேவித்து அதனல் வரும் பலன்களைப் பிரார்த்தித்து நிற்க.

விலங்காமயல்

இத்தகைய ஔஷதத்தை ஸேவிப்பதால் என்ன பலனைக் கண்டோமென்ருல் - ஒரு நோய் தீர்ந்து

மற்றெரு நோய் பற்றிக்கொண்டது. முதலிலிருந்த நோய்க்குப் பரிஹாரம் உண்டு. இந்த மருந்தினுல் வந்த நோயோ விலங்காமயல்; எந்நாளும் தீராத நோய். மயல் - மயக்கம்; காதல். கட்டுவிச்சியும் 'தீராநோய் செய்தானென வுரைத்தாள்' என்று மடலில் முடிவு கட்டினுற்போலே இப்பாசுரத்திலும் 'விலங்காமயல்' என்று நிச்சயித்ததாகக் கூறலாம். விலங்காமயல் - விலக்கவொண்ணுத காதல்; விலக்க வேண்டாத காதல். ஆசைப்பட்டு நெடுங்காலம் தவங் கிடந்து பெறவேண்டிய இந்தக்காதல் நிலையை அடைந்த பின்னர் விலக்க வேண்டு மென்று நினைப்பாரும் உண்டோ என்றபடி: விலங்கு ஆம் மயல் என்றும் பதம் பிரிக்கலாம். விலங்காக ஆகிய மயல், விலங்கு - எம்பெருமானிடத்துப் பிணிக்கும் பாசம். அங்குமிங்கும் சலிக்கவொட்டாமற் செய்யும் தளை (விலங்கு). இங்கு எம்பெருமானிடம் காதல் அவனை விட்டு வேறென்றிலும் மனம் செல்லாதவாறு செய்கின்றது. 'தூரம் ப்ரயாத மபி துஸ்த்யஜ காட பந்தம்' என்று இவர்தாமே தேவநாயக பஞ்சாசத்தில் அநுஸந்தித்தபடி. எவ்வளவு தூரத்திற் செல்ல முற்பட்டாலும் வலியப் பிடித்திழுக்கும்படியான ஒரு பந்தம்.

பற்பிலமர்ந்த செய்யாள் படிகாட்டிய பண்புடை எம் விற்புருவக் கொடிக்கு-பெரியபிராட்டியாருடைய

தன்மைகளை அநுசரிக்கும் என்னுடைய இந்தப் பெண் என்பது இந்தத் தொடருக்குத் திரண்ட பொருள். செய்யாள் - லக்ஷ்மி. பற்பு என்பது தாமரையைக் குறிக்கும். அதாகிற இல் - வீடு, வாஸஸ்தானம் அதில் அமர்ந்த - வீற்றிருக்கும் செய்யாள். இங்கு 'பற்பிலமர்ந்த செய்யாள்' என்ற தொடர் இந்த திவ்ய தேசத்தில் தனிக்கோயில் நாய்ச்சியாராக எழுந்தருளியிருக்கும் செங்கமலவல்லி நாய்ச்சியாரை ஸூசிப்பிப்பதாயும் கொள்ளலாம்.

'பற்பில் மறந்த செய்யாள்' என்றும் பாடமுண்டு. அப்போது பெருமாளிடத்து ஆசையாலே தனது பிறந்தகமான தாமரையை முற்றிலும் மறந்த செய்யாள் என்கிறது. 'உததிபரம வ்யோம்நோ:' என்று பட்டர் அருளிச்செய்ததை அடியொற்றியது இப்பாடத்தால் வரும் பொருள். ப்ரகரணத்திற்கும் இப்பாடம் நன்கு பொருந்தியதாகக் காண்கிறது.

சேய்யாள் படிகாட்டிய பண்புடை

எம்பெருமானிடத்து ப்ரீதி நிறைந்து அவனை விட்டு அரைக்கணமும் பிரிவைச் சகியாதவளாய்ப் பரிதவிக்கும் நாயகியின் நிலையை வர்ணிக்கும் நம்மாழ்வார் 'திருமகள் கொல் பிறந்திட்டாள்' என்று பாடினார். திருமங்கையாழ்வாரும் 'காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப் பாவையொப்பாள்' என்று பாசுரமிட்டார். இப்பாசுரங்களெல்லாம் ஸ்வாமி

திருவுள்ளத்திலோட 'செய்யாள் படி காட்டிய பண்புடை' யென்று பேசுகிறார். இறையு மகல கில்லேன் என்று க்ஷணகாலமும் பிரிவைப் பொறுக்காத தன்மையை எண்ணிப் பெரிய பிராட்டியாரோடு ஸாம்யம் காட்டியபடி.

பண்பு இப்படியானால் இவள் ரூபம் எப்படி? விற்புருவக் கொடி. 'வில்லைத் தொலைத்த புருவத்தாள்' கொடி போன்ற மேனியை யுடையாள் என்று இந்நாயகியினுடைய ரூபவைலக்ஷண்யம் பேசப்படுகின்றது. தமிழ்ப் பிரபந்தங்கள் இயற்றுவதில் இவர் பரகாலனே அல்லது பக்திஸாரனே வென்று ஸ்ரீ தேசிகன் விஷயமாகப் பூர்வர்கள் வியந்து புகழ்ந்திருக்கிறார்கள். நம்மாழ்வார் பாடிய 'கங்குலும் பகலும்' என்ற திருவாய் மொழியின் ரீதியை அநுஸரித்துத்திருமங்கை யாழ்வார் 'திவளும் வெண்மதி போல்' என்ற திருமொழியைப் பாடியிருக்கிறார். அவ்விரண்டு பதிகங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது பராங்குச நாயகிக்கு பகவத் ப்ரேமம் முற்றியதென்று ஒரு பெருமை மட்டும் வெளியாகிறது. பரகால நாயகிக்கு அந்தப் பெருமையுடன் தானே ரூபாலவண்யாதிகள் நிறைந்து அவனே பார்த்து மேல் விழுவதற்குறிய பெருமை வாய்ந்தவள் இவள் என்று விசேஷாம்சம் அழகாகக் காட்டப் பட்டிருக்கிறது. 'குவளையங்கண்ணி' 'கொல்லியம்பாவை'

'இளம்படி' 'இளங்கனி' 'குலங்கெழு கொல்லி' 'கோமளவல்லி' என்றெல்லாம் பேசிய கலியனை அடியொற்றியே இங்கே 'விற்புருவக் கொடி' என்று வர்ணித்ததாகக் கொள்ள வேண்டும். ஸ்வாமி தேசிகன் நாயிகாபாவத்தை அடைந்த போது எந்த வர்ணனை தான் அதிகமாகும்? ஆசார்யோத்தமன் ஸ்ரீ தேவநாதனிடத்தில் மிகுந்த வ்யாமோஹம் அடைந்தமையை அவ்வெம் பெருமான் விஷயமான எல்லாப்பிரபந்தங்களிலும் காண்கிறோம். அது மிக விலக்ஷணமான தசையை யடைந்து 'பக்தி: ச்ருங்காரவ்ருத்த்யா பரிணமதி' என்று அவர் தாமே யருளிச் செய்தபடி ஸ்த்ரீபாவத்தை யடையச் செய்தது. ஸ்ரீ தேவநாயகபஞ்சாசத்தில் 'பிம்பாதரம் ஸ்ப்ருசதி ராகவதீ மதிர்மே' என்பது போன்ற பல வாக்கியங்கள் உள. அடுத்த பிரபந்தமான அச்யுதசதகம் முழுவதையும் பெண்கள் பாஷை யென்று பிரஸித்தியடைந்த பிராகிருத பாஷையிலே அமைத்தார். அச்யுத சதகத்திற்கு அடுத்த பிரபந்தம் மும்மணிக் கோவை. வடமொழி-ப்ராக்ருத நூல்களிலேயே சிருங்காரபாவத்தைப் பாராட்டிய ஸ்வாமி தமிழ் நூலாகிய இதில் இன்னும் வெளிப்படையான ரீதியிலே ஆழ்வார் காட்டிய துறைகளைக் கொண்டு அவ்வனுபவத்தைப் பேசி யிருக்கிறார். இந்த நூலில் 3, 6, 9, ம் பாசுரங்களில் ஆழ்வார்களுடைய நாயிகா பாவ ரஸங்

களையெல்லாம் பொருத்திப்பாடியிருப்பது புலப்படு கிறது.

மேல் பிரபந்தங்களான பந்து, கழல், அம்மானை, ஊசல், ஏசல், என்னும் ஐந்தும் கூட நாயிகா பாவத் திலே நிலையுடையன வாதல் வேண்டும். அவை நம் தீவினையால் மறைந்து விட்டன. 9.

பெற்றனை நீயே மற்றுள வெல்லாம்
பெறுவது நின்னை யுறுவது கொள்வார்
நின்னாலன்றி மன்னாரின்பம்
நின்பொருட்டுநீ என்பொருட்டிலை
நின்னுரு நின்று மின்னுருத் தோன்றும்
நின்றனக்கு நிகர் நின்னடியடைவார்
நின்பாலன்றி அன்பாலுய்யார்
வாரணமழைக்க வந்த காரணமே. 10

பதவுரை:—

வாரணம் - கஜேந்திரன்
அழைக்க - (மூலமே என்று) அழைக்க
வந்த - வந்து தோன்றிய
காரணமே! - காரண வஸ்துவே
மற்று உள எல்லாம் - (உன்னைத் தவிர) மற்றெல்லாவற்றையும்
நீயே பெற்றனை - நீயே பிறப்பித்தாய்.

உறுவது கொள்வார் - தாம் பெறவேண்டிய
தகுந்த புருஷார்த்தத்தை
அடைய விரும்புமவர்கள்
பெறுவது - அடைவது
நின்னை - உன்னைத்தான்
(அவர்கள்)
நின்னால் அன்றி - உன்னாலேயன்றி
இன்பம் மன்னார் - (வேறொருவராலும்
எத்தகைய) இன்பத்தையும்
பெறமாட்டார்கள்.
நீ - நீ (நின் இருப்பும் செய்கையும்)
நின் பொருட்டு - உனக்காகவே (யன்றி)
என் பொருட்டு இல்லை } என் பலனுக்காக அன்று.
நின் உரு நின்றும் - உன் உருவத்தினின்றும்
மின் உரு - மின்போல் சஞ்சலமான, நிலையற்ற
உலகம்
தோன்றும் - உற்பத்தியாகின்றது;
நின் அடி - உன் திருவடிகளை
அடைவார் - அடைபவர்
நின்றனக்கு - உனக்கு
நிகர் - சமமாக ஆவார்கள்;
நின்பால் - உன் விஷயத்தில்
அன்பால் அன்றி - பக்தி கொண்டாலன்றி

உய்யார் - உஜ்ஜீவிக்கமாட்டார்கள்.
இப்பிரபந்தம் இன்று காணும் நிலையில் இது கடைசிப் பாசுரமாக விளங்குகிறது. தமிழ்ப் பிரபந்த விலக்கணத்தின் படி மும்மணிக்கோவை 30 பாசுரங்கள் கொண்டதாக விருக்க வேண்டும். இங்கு இதற்கு மேலுள்ள 20 பாசுரங்களும் நமக்குக் கிடைக்காமல் மறைந்து போயிருக்கவேண்டும்.

பெற்றனை நீயே மற்றுள வெல்லாம்

'மற்றுள தெல்லாம்' என்றும் பாடம் கொள்வார். பொருள் ஒன்றே. உன்னை யொழிந்த அனைத்தையும் நீயே பிறப்பித்தனை 'பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ' என்றார் ஆழ்வார். பெற்றனை என்பதற்கு அடைந்திருக்கின்றாய் என்றும் பொருள் கொள்ளலாம். அப்போது அவையனைத்தும் உன்னுடையனவே என்ற கருத்துத் தேர்கிறது.

எல்லாம் உள=எல்லாம் ஸத்தியமே; பொய்யானவை யல்ல என்ற விசிஷ்டாத்வைததத்துவம் த்வனிக்கிறது.

பெறுவது நின்னை யுறுவது கொள்வார்

தம்ஸ்வரூபத்திற்கு ஏற்ற பலனைப் பெறவிரும்புவோர் பெறுவது உன்னையே. 'உறுவது கொள்வார்' என்றது பரமைகாந்திகளை. 'திருவொடு மருவிய இயற்கை மாயாப் பெருவிறலுலகம் மூன்றினொடு நல்

வீடு பெறினும் கொள்வ தெண்ணுமோ தெள்ளி யோர் குறிப்பே' என்று நம்மாழ்வாரும், 'நாதே நஸ்த்ருணம் அந்யத்-அந்யத்-அபி-வா....... வாசா ந யாசாமஹே' என்று ஸ்ரீ தேசிகன்தாமும் அருளிச் செய்தபடி எம்பெருமானை யன்றி வேறெதையும் பொருட்படுத்தாத அதிகாரிகள் இங்கே குறிப்பிடப் பட்டவர்.

முதலிரண்டு வாக்கியங்களையும் ஒன்று சேர்த்துப் பார்த்தால் எல்லாவற்றையும் நீ அடைந்து நிற்கிறாய்; உன்னை அம்மஹாத்மாக்கள் பெறுகின்றனர் என்று ரஸமான ஒரு கருத்துத் தோன்றுகிறது.

நின்னாலன்றிமன் னாரின்பம்.

இந்த வாக்யத்திற்கும் 'உறுவது கொள்வார்' என்பதையே எழுவாயாகக் கொள்ள வேண்டும்' பரமை காந்திகள் நீயாகிய இன்பத்தைப் பெறுவது வும் உன்னாலேயே. அவர்களுக்கு நீ புருஷார்த்த மாவது மட்டு மன்றி உபாயமும் நீயே. இங்கு 'உன்னாலல்லால் யாவராலு மொன்றுங் குறைவேண் டேன்' என்ற அவர்களது திடமான மனப்பான்மை விளங்குகிறது. 'அதுவுமவன தின்னருளே' என்று அவன் கை பார்த்திருக்குமவரே உண்மைப் பரமை காந்திகள்.

'உறுவது கொள்வார்' என்னுமதை இங்கு

வருவியாமல், யார் எந்த இன்பத்தை எவர் மூலமாகப் பெற்ருலும் அது உண்மையில் உன்னுலேயே கிடைக்கின்றது என்று பொதுப்பட்ட தத்துவத்தை உணர்த்தியதாகவும் கொள்ளலாம்.

நின் பொருட்டு நீ என் பொருட்டில்லை

'நின் பொருட்டன்றி என் பொருட்டில்லை என்றும் பாடமுண்டு. உன் இருப்பும் உன் செய்கையும் மற்றுமுள்ள அனைத்தும் உனக்காகவே யன்றி எனக்காக வில்லை. அவற்ருல் வரும் பலன் அனைத்தும் உன்னுடையனவே. இதனுல் எம்பெருமான் அனைத்துக்கும் சேஷியாய் நிற்கும் தன்மை கூறப்பட்டபடி. பட்டர் 'ஸ்வமுத்திச்ய ஸ்ரீமான்' என்று உபநிஷத்தின் கருத்தை வெளியிட்டதை இங்கு 'நின் பொருட்டு' என்றும் 'என் பொருட்டில்லை' என்றும் இரண்டு வகையாக ஸ்ரீ தேசிகன் காட்டியருளியபடி.

நின்னுரு நின்று மின்னுருத் தோன்றும்

உன் உருவத்திலிருந்து மின்னலைப் போல் சஞ்சலமான, நிலையற்ற ஜகத்துத் தோன்றும்.

இங்கு ஒரு ரஸமான அர்த்தம் த்வனியால் கிடைக்கிற தென்னலாம். அதாவது மின் உரு - மின்னற்கொடி போன்ற பெரியபிராட்டி, நின்னுரு நின்று - உன் வடிவத்தில், தோன்றும் பிரகாசிக்கிருள் என்று திருவையும் திருமாலையும் நேரிற்கண்ட

பேயாழ்வார் 'பொலிந்திருண்ட கார் வானில் மின்னே போல் தோன்றி மலிந்து திருவிருந்தமார்பன்' என்று பாசுரமிட்டதைத் திருவுள்ளத்திற் கொண்டு அந்தப் பொருளையும் கொடுக்கும் முறையில் பாசுரத்தை ஸ்ரீ தேசிகன் அமைத்திருக்கக்கூடும்.

நின்றனக்கு நிகர் நின்னடியடைவார்

உன்னடி யடைந்து அதனால் உனது (பரம)பதம் பெற்றவர்கள் உன்னைப்போன்ற வடிவம் பெறுதலாகிய ஸாரூப்யத்தை யடைவதுடன் உனக்குச் சமமான போகத்தையும் பெற்று விளங்குகிறார்கள். 'தன்னனைய சூரியர் தன்னடிக் கீழ்வாழ' என்று இவர் தாமே வேறிடத்தில் அருளிச்செய்தார். தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள் செய்யும் அவனதியல்பும் ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்துழலும் சேதநர்கள் அவனடி யடைந்த மாத்திரத்தாற் பெறும் பேறும் ஒருங்கே விளங்குகின்றன இவ்வடியில்.

நின்பாலன்றி அன்பாலுய்யார்

நின்னடி யடைபவர் அன்பாலன்றி உய்யார்; அதிலும் நின்பால் அன்பாலன்றி உய்யார் என்று பொருள் கொள்க.

வாரணமழைக்க வந்த காரணமே

கீழ் 9 பாசுரங்களில் ஸ்ரீ தேவநாதனை அடியவர்க்கு மெய்யனென்றும் அயிந்தை நாதனென்றும்

தெய்வநாயகனென்றும் விளித்தார். ஸ்ரீ தேசிகன் இந்தப் பாசுரத்தில் பொதுப்பட மூலகாரணமே என்று மனமுருகிக் கூப்பிடுகிறார். கஜேந்திரனைக் காத்த வரலாற்றில் ஸ்ரீ தேசிகனுக்கு மிக்க ஈடுபாடு உண்டென்னலாம். நவமணி மாலையிலும் "கையு மாழியுமாய்க் களிறு காத்தவனே" என்று அழைக் கிறார். வாரணம் - யானை. ஏதோ ஒரு யானை. அழைக்க - ஆதிமூலமே என்று கூப்பிட, வந்த - (அந்த யானையைக் காக்க) ஓடிவந்த காரணமே - ஜகத்காரண வஸ்துவே; இங்கு 'அழைக்க' என்ற சொல் யாகம் முதலியக்ரியைகளையும் விசேஷ தபஸ் ஸையும் செய்தும் பெருவதற்கு அரியனான எம்பெரு மான் யானை 'மூலமே' என்று அழைத்த மாத் திரத்திலே ஓடிவந்த ஸௌலப்யத்தைக் காட்டு கிறது. உலகில் தன்னிடம் சேருவதையே வருகை என்று கூறுவதால் இங்கு 'வந்த' என்ற சொல் கஜேந்த்ர ரக்ஷணம் செய்வதற்காக வந்த இடமே எம் பெருமானுக்கு உரிய இடமென்றும் ஆகவே தன்னிடத்திற்கு வந்தானென்றும் பொருளை த்வனியால் காட்டும். 'காரணம்' என்றதால் தெய்வங்களெல்லாம் ஓடி யொளித்தவன்று அவன் ஒருவனே யானையைக் காக்க ஓடி வந்தபடியால் அவனே தெய்வநாயகன் எனப்படும் காரணமாகின் றான் என்று ஸூசித்ததாயிற்று.

இந்தப் பாசுரத்தில் ஸ்ரீ தேசிகன் ஒரு சித்திரத்தை அமைத்திருக்கிறார். நீ, நின்னை, நின்னால், நின்பொருட்டு, நின்னுரு நின்று, நின் (னடி), நின்பால் என்று ஏழு வேற்றுமைகளையும் ஏழடிகளில் வரிசையாய்க் கையாண்டு காரணமே யென்று விளிவேற்றுமையில் முடித்திருக்கிறார். தொன்று தொட்டு நான், என்னை என்னால், எனக்கு, என்னின், எனது. என்பால் என்று, அஹங்காரம் முற்றி அதன்மீது வரும் வேற்றுமைகளையே உபயோகித்து வந்த சேதநன் பகவதநுக்ரஹம் பெற்றவாறே அஹங்காரமமகாரங்களை ஒழித்து எம்பெருமானை முன்னிலையாக்கி அவன் விஷயத்திலே அத்தனை வேற்றுமைகளையும் உபயோகித்து உய்வான் என்று ஸூசிக்கப்பட்டதாகிறது. மேலும் வேற்றுமையே யில்லாத எம்பெருமானிடம் எல்லா வேற்றுமைகளையும் ஏற்றிப் பேசிய ரஸம் காண்க.

இப்பிரபந்தத்தின் ஆதிச்சொல் அருள்; முடிவிலுள்ள சொல் - காரணம். இரண்டும் சேர்ந்து 'அருள் காரணம்' என்றாகி திருமாலின் அருளே அனைத்துக்கும் முக்கிய காரணம் என்ற உண்மைப் பொருளை இப்பிரபந்தம் முழுவதிலும் தெரிவிக்கின்றது. அவ்வருள்தான் அடியோங்கள் இந்த வியாக்கியாநத்தை எழுதி வெளியிடுவதற்கும் காரணமாய்

நிற்கின்றது என்று விண்ணப்பித்துக் கொண்டு அருள் கொண்டாடும் அடியவரின்புற, ஸ்ரீ தேசிகன் திருவருளை முன்னிட்டு இச்சிறு நூலை ஸ்ரீ தேவநாதன் திருவடிகளில் ஸமர்ப்பிக்கின்றோம்.

மும்மணிக்கோவை - உரை முற்றிற்று

சீரார் தூப்புல் திருவேங்கட முடையான் திருவடிகளே சர



Printed at the M.L.J. Press, Mylapore, Madras—M.S.

# NAVARATNA SERIES

(ALREADY PUBLISHED)

Dasavatara Stotra of Sri Vedanta Desika
With meaning and commentary in Tamil and a Foreword in English.

*IN THE PRESS*

1. Navamanimalai
   of Sri Vedanta Desika with meaning and commentary in Tamil and a Foreword in English.

2. The Worship of Sandhya
   a brochure in English by Sri V. V. Srinivasa Aiyangar and a foreword in English by Prof. A. Srinivasaraghavan.